22



# நமது நாடு


திருநெல்வேலித் தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி :: & :: சென்னை.

கழக வெளியீடு—௫௯௮

# நமது நாடு

ஆக்கியோன்
யாழ்ப்பாணத்து நாவாலியூர்
திருவாளர் ந. சி. கந்தையா பிள்ளை

:: திருநெல்வேலித் தென்னிந்திய ::
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி & சென்னை.

*First Edition:* *September 1945*

*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA
:: WORKS PUBLISHING SOCIETY ::
:: TINNEVELLY, LTD. ::
TIRUNELVELI & MADRAS.



Printed at the Sri Magal Vilasam Press, Madras.
Q. H. Ms/95 - B, 800 Copies 1-11-46.

# முன்னுரை

"**நமது நாடு**" என்னும் இந்நூல் சிறுவர் தமிழ் மக்களின் வரலாற்றைக் கற்று அறிந்து கொள்ளும் முறையில் சுருங்க எழுதப்பட்ட தொன்றாகும். இதன்கண் யாம் கூறியுள்ள ஒவ்வொன்றுக்கும் தக்க சான்றுகள் உள்ளன. அவைகளை இப்பொருள்பற்றிக் கூறும் விரிந்த நூலாகிய "தமிழ் இந்தியா"விற் காண்க. ஆதிமக்கள் ஒரே வகையினர். அவர் சமயம் ஒன்று; மொழி ஒன்று என்னும் கொள்கைகள் வலி பெற்று வருகின்றன. மேல்நாட்டு ஆராய்ச்சி அறிஞர்களின் ஆய்வுகளை ஒருங்கு வைத்து ஆராயுமிடத்து அவ்வாதி மக்கள் தமிழரே என நன்கு தெளிவாகின்றது. இது மிக வியப்புக்குரிய தொன்றாகும். ஆராய்ச்சி நூலை இளைஞர் எளிதில் கற்று விளங்கிக்கொள்ளமாட்டாதவர்களாவர். ஆகவே ஆராய்ச்சியிற் கண்ட முடிவுகள் வரலாறுபோலத தொடர்பு படுத்தி எழுதப்பட் டிருக்கின்றன.

"திருமலர் மணமென வொருமையின் மக்கி
எண்ணில் பொழிற்பயிர் பண்ணிக் காக்கும்
ஒப்பில் பெருமை மெய்ப்பொருள் அன்பு
பாங்கி னிலைபெற் றோங்குந் தமிழகத்
தாறறி வுடைமைப் பேறுறு மக்கள்
முன்னர்த் தோன்றி மன்னிக் கெழுமி
இமிழிய லொலிசேர் தமிழ்மொழி பேசி
மண்ணிற் பலவிட நண்ணிக் குடியிருந்
தவ்வவ் விடத்துக் கொவ்விய வண்ணம்
கூற்று நடையுடை வேற்றுமை யெய்தி
பற்பல வினப்பெயர் பெற்றுப் பெருகினர்."

சென்னை
9-9-1945

ந. சி. க.

# பொருளடக்கம்






இப்படத்தில் நிழலுடைய பகுதி முற்காலத்தில் தெற்கே கிடந்த நிலப்பரப்பைக் குறிப்பது. அம்புக்குறிகள் மக்கள் பிரிந்து சென்ற வழிகளைக் குறிப்பன. தமிழ் நாட்டினின்றும் பிரிந்து சென்று வடதுருவ நாடுகளிற் றங்கிய மக்கள் ஆரியரானார்கள். இவர்கள் பின்பு மத்திய ஆசியாவிற் றங்கி இந்தியநாட்டை அடைந்தார்கள்.



(ஏகபாதமூர்த்தி) திருவரங்கம்.



கித்தைதி (சின்ன ஆசிய) மக்களின் தந்தைக் கடவுள்.



சிரியா நாட்டிற் கிடைத்த தந்தைக் கடவுளின் வடிவம்.

# நமது நாடு

## 1. நமது தாயகம்

நாம் எல்லாரும் தமிழர்; நாம் நம்மைப் பற்றி அறிதல்வேண்டும்; நம் நாட்டைப்பற்றி யும் அறிதல்வேண்டும்; வேண்டுமாயின் பின்பு பிற்ற நாட்டவர்களைப்பற்றி அறியலாம்.

தமிழர், உலகில் மிகப் பழைய சாதியினர். தமிழகத்தினின்றே உலகின் பல பாகங்களுக்கு நாகரிகம் பரந்து சென்றது. இதனை மேல் நாட்டு அறிஞர் சிலர் நன்கு ஆராய்ந்து கூறி யிருக்கின்றனர். இவ்வாறு கூறுதல் பலருக்கு வியப்பைத் தரும். இப்பொழுது தமிழர் உலகில் பெரிய சாதியினராகக் காணப்படவில்லை அல் லவா ? இதுவே அவ்வியப்பிற்குக் காரணமாகும். வறியவர் செல்வராதலும் செல்வர் வறியவராத லும் உலக இயல்பு. ஒருகாலத்தில் ஒருவரின் பின்ஒருவராகச்சாதியினர் பலர்உயர்நிலை அடைந் திருந்தனர் ; பின்பு வீழ்நிலை அடைந்தனர். வீழ் நிலை அடைந்த சாதியாருள் தமிழரும் ஒருவர்.

மற்றைச் சாதியாரின் வரலாற்று நூல்கள் பல இருக்கின்றன. தமிழரின் வரலாறு கூறும் நூல்கள் பல வெளிவரவில்லை. ஆகவே நாம் நம்மைப்பற்றிய வரலாறுகளை எளிதில் அறிய முடியவில்லை. இப்பொழுது நமது நாட்டைப் பற்றிச் சிறிது படிப்போம்.

பூகோள படத்தில் இந்தியாவைப் பாருங்கள். அதன் தென்பகுதியில் கன்னியாகுமரி என்னும் மூனை இருக்கின்றது. அதற்குத் தெற்கே பெரிய கடல் ஒன்று அலைமோதுகின்றது. அதற்கு இக்காலத்தில் இந்துமாக் கடல் என்று பெயர். நாம் வாழும் உலகம் தோன்றி எண்ணில்லாத காலம் ஆகின்றது. இவ்வளவு எண்ணில்லாத காலத்துள், இது பல மாறுதல்கள் அடைந்துவந்துள்ளது. இந்துமாக் கடல் தோன்றுமுன் அங்கே பெரிய நிலப்பரப்பு ஒன்று இருந்தது. அது நாவலந்தீவு எனப்பட்டது. ஐரோப்பிய மக்கள் அதற்கு லெமூரியா எனப் பெயர் இட்டுள்ளார்கள். 'கொந்துவானு' என்பதும் அவர்கள் அதற்குக் கொடுத்த மற்றொரு பெயர். இதன் நடுவில் மேருமலை நின்றது. அதன் ஒரு கொடுமுடியே இலங்கைத்தீவு. நாவலந்தீவு அல்லது லெமூரியா இப்பொழுது வடக்கே ஆசியாக்கண்டம் இருப்பதுபோலத் தெற்கில் இருந்தது.



நிலவுருண்டை ஒரு காலத்தில் அனற்பந்து போல இருந்தது. இதனுள் இன்றும் நெருப்பு இருக்கின்றது. இந்நெருப்பு இடையிடையே பூமியைக் கிழித்துக்கொண்டு வெளியே கிளம்புவதுண்டு. அப்பொழுது அது உள்ளே இருந்து கல்லையும் மண்ணையும் மேலே கக்கும். அதனால் அவ்வெடிப்புகளின் வாய்களில் பெரிய மலைகள் உண்டாகும். இவ்வாறு பூமியினின்றும்நெருப்பு வெளியே வரும் இடங்கள் எரிமலைகள் எனப்படும். எரிமலைக் குழப்பங்களால் சில சமயங்களில் தரை கடலுள் மறைந்துபோகும். நாவலந் தீவில் எரிமலைக் குழப்பங்கள் பல தோன்றின. அப்பொழுது அதன் பல பகுதிகள் கடலுள் மறைந்தன. அப்பொழுது கன்னியா குமரியைத் தொடர்ந்து ஒரு பெரிய நிலப்பரப்பு நீண்டிருந்தது. அங்கு வாழ்ந்த மக்கள் தாய்க்கடவுளை வழிபட்டார்கள். தாய்க் கடவுளுக்குக் கன்னி அல்லது குமரி என்பது பெயர். ஆகவே அந்தத் தரைக்குக் குமரி நாடு என்று பெயருண்டாயிற்று. நாவலந்தீவும் அதனைச் சார்ந்த குமரி நாடுமே தமிழ்மக்களின் தாயகம் என்பதை அடுத்த பாடத்திற் படிப்போம்.

---

## 2. நம் முன்னோர்

உலகிற் காணப்படும் படைப்புகள் எல்லா வற்றிற்கும் ஒரு தொடக்கம் உண்டு. அது போலவே மக்கட் படைப்புக்கும் ஒரு தொடக்கம் உண்டு. ஆதி மக்கள் நாவலந்தீவிலேயே தோன்றிப் பெருகினார்கள். அவர்கள் ஆதியில் தோன்றிய பகுதி இப்பொழுது சுமத்திரா, யாவாத் தீவுகள் இருக்குமிடமா யிருக்கலாமென ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். ஒரு தாய்தந்தையரினின்று மக்கள் பெருகத் தொடங்கினால், 1750 ஆண்டுகளில் இன்றைய மக்கள் அளவு பெருகி விடுவார்கள். இவ்வாறு மேல்நாட்டு அறிஞர் ஒருவர் கணக்கிட்டுள்ளார். மக்கள் இவ்வளவு வேகமாகப் பெருகுவார்களானால் அவர்கள் இருப்பதற்கு இவ்வுலகம் போதாமல் இருக்குமல்லவா? மக்கள் இவ்வளவு வேகமாகப் பெருகுவதில்லை. இடையிடையே கொள்ளை நோயும் போரும் தோன்றி மக்களின் தொகையைக் குறைத்துவிடுகின்றன.

மனிதன் உயிர் நூல் முறைப்படி விலங்கினத்தைச் சேர்ந்தவன்; விலங்குகளிலும் பார்க்க நிறை



வுடையவன்; சிந்தித்து ஒன்றினைக் கண்டுபிடிக்கும் அறிவுஆற்றல் உடையவன். மனிதனுடைய பற்களும் குடலும் காய், கனி, விதை முதலிய தாவரப் பொருள்களை உண்டு வாழ்தற்கேற்ற அமைப்பு உடையன. ஆதிகாலத்து மனிதர் காடுகளிற் கிடைக்கும் காய், கனி, விதைகளை உண்டனர்; சுனை நீரைப் பருகினர்; மலைத் தாழ்வாரங்களிலும் நிழல் மரங்களின் கீழும் ஒதுங்கினர்; சுருங்கக் கூறுமிடத்துக் குரங்குகளைப் போலவே வாழ்ந்தனர்.

அவர்களின்தொகைபெருகத்தொடங்கிற்று. அப்பொழுது எல்லோருக்கும் போதிய உணவு ஒரே இடத்திலேயே கிடைத்தல் அரிதாயிற்று. ஆகவே அவர்கள் தமது இருப்பிடங்களை விட்டுச் சிறிது சிறிதாக அகன்று சென்று வாழத் தொடங்கினர். அப்போது அவர்கள் நிலம், வீடு, பொருள், பண்டங்கள் வைத்துக்கொள்ளவில்லை. ஆகவே அவர்கள் தாம்சென்ற இடங்களிலேயே தங்கி வாழ்ந்தனர். முன் வாழ்ந்த இடங்களுக்குத் திரும்பிச் செல்லும் கட்டாயம் அவர்களுக்கு உண்டாகவில்லை. இவ்வாறு மக்கள் இவ்வுலகின் எல்லாப் பாகங்களுக்குஞ் சென்று பரவினர்.

அவர்கள் பிரியத் தொடங்கிய நடு இடத்தில் சிலர் தங்கி வாழ்ந்தனர். அவர்கள் படிப்படியே

நாகரிக வளர்ச்சி யடைந்தனர். நாகரிகம் எப்படி வளர்ச்சி யடைகின்றது? வாழ்க்கைக்கு வேண்டும் ஊணும் உடையும் பிறவும் தேடும் வகைகளினாலேயே அது வளர்கின்றது. ஆதியில் மக்கள் காடுகளிற் கிடைக்கும் காய், கனி, விதைகளை உண்டு வாழ்ந்தனர். அவை, எல்லாக் காலங்களிலும் கிடைப்பது அரிதாயின. ஆகவே அவர்கள் விலங்குகளையும் பறவைகளையும் கொன்று அவற்றின் ஊனையும் உணவாகக் கொண்டனர். பறவைகளையும் விலங்குகளையும் வேட்டையாடிக் கொல்வது எந்நேரமும் முடியாமல் இருந்தது. பின்பு அவர்கள் காட்டில் வாழும் ஆடுமாடு முதலிய விலங்குகளைப் பிடித்துப் பழக்கி வளர்த்தனர்; தமக்குக் கிடைக்கும் மற்ற உணவுகளுடன் அவை தரும் பால் முதலிய பயன்களையும் உண்டு வாழ அறிந்தனர்; பின்பு மழைபெய்யும் பருவங்களை அறிந்து தானியங்களை விளைவித்தனர். இவ்வாறு நாகரிகம் படிப்படியாக வளர்ந்தது.

இவ்வாறு நாகரிக வளர்ச்சியடைந்த மக்கள் நாவலந் தீவிலே வாழ்ந்தார்கள். எரிமலைக் குழப்பங்களால் நாவலந் தீவின் பல பகுதிகள் தீவுக் கூட்டங்களாக மாறின. அப்பொழுது இம்மக்களுள் பலர் கூட்டங் கூட்டமாகத் தனித்து வாழ நேர்ந்தது; பெரும் பகுதியினர் வடக்கு நோக்கிச் சென்றனர். நாவலந் தீவின் வடக்கே குமரிநாடு இருந்ததென முன் பாடத்திற் படித்தோம். குமரிநாட்டில் வாழ்ந்த மக்கள் திருந்திய நாகரிகம் அடைந்திருந்தார்கள்.



---

## 3. குமரி நாடு

குமரி நாட்டிலே குமரி, பஃறுளி, பேராறு முதலிய ஆறுகள் பாய்ந்தன. குமரிக்குன்று, மணிமலை முதலிய மலைகள் இருந்தன. தெங்கு நாடு, பனை நாடு, பெருவள நாடு முதலிய நாடுகள் விளங்கின. நாடு மிகச் செழிப்புற்றிருந்தது. மக்கள் தமிழ்மொழியை வழங்கினார்கள். அந்நாட்டை ஒருகாலத்தில் செங்கோன் என்னும் அரசன் ஆண்டான். இவன் பல நாடுகளைத் தன்னடிப்படுத்திப் பேரரசனாய் விளங்கினான். இவன் தமிழில் மிகப் பற்றுடையவன். இவன், நாட்டில் விளங்கிய தமிழ்ப் பெரும் புலவர்களைத் தன் தலைநகருக்கு அழைத்தான்; தமிழ்ப்பேரவை கூட்டினான்; புலவர்களுக்கு ஊக்கம் அளித்தான். அவர்கள் அரிய தமிழ் நூல்கள் பல இயற்றினர். நாடெங்கும் தமிழ் மணம் கமழ்ந்தது.

செங்கோன்மீது பாடிய பழைய நூல் ஒன்று உள்ளது. அதற்குச் 'செங்கோன் தரைச்செலவு'

என்பது பெயர். தரைச்செலவு என்பதற்குப் படை எடுத்துச் சென்று வெற்றி பெறுதல் என்று பொருள். அந்நூல் முழுவதும் இப்பொழுது கிடைக்கவில்லை; சில பாட்டுக்களே கிடைத்துள்ளன. குமரி நாடு ஒரு காலத்தில் நாகரிகத்தில் உச்ச நிலை அடைந்திருந்தது. அப்பொழுது அந்நாட்டைச் சிறிது சிறிதாகக் கடல் விழுங்கிற்று. கடல் கோளுக்கு அஞ்சி மக்கள் வடக்குநோக்கி ஓடிச் சென்றனர்; சென்ற மக்கள் தென்னிந்தியாவில் தங்கி வாழ்ந்தனர்.

கடல் கோளினால் தமிழரின் பழைய நாகரிகக் குறிகள் மறைந்தன. அவர்களின் நூல்களும் மாண்டன. கடல் கோளுக்குப் பிழைத்து வந்த மக்கள் தெற்கில் கன்னித் தெய்வத்தின் திருவுருவை நாட்டி வழிபட்டார்கள். அவ்வுருவம் வைக்கப்பட்ட இடம் 'கன்னியா குமரி' என்னும் பெயர் பெற்றது. இரண்டாயிரம் ஆண்டுகளின் முன் அத்திருவுருவம் அங்குக் காணப்பட்டது. அதனை இந்தியாவுக்குவந்து மீண்ட உரோமைப் பிரயாணிகள் குறிப்பிட்டிருக்கின்றார்கள்.

---

## 4. நாவலந் தீவு

தமிழ் மக்கள், தாம் இப்பொழுது வந்தடைந்த நாட்டுக்கு நாவலந் தீவு எனப் பெயரிட்டனர். இந்தியா என்பது தமிழர் கொடுத்த பெயரன்று. அது கிரேக்க மக்கள் நமது நாட்டுக்கு இட்ட பெயர்; இந்தியா என்பதற்குச் சிந்து நதியை உடைய நாடு என்பது பொருள். சிந்து என்பதைக் கிரேக்கர் ஹிந்து என்று உச்சரித்தனர். ஹிந்துவிலிருந்து 'இந்தியா' தோன்றிற்று. சிந்து என்பதற்குச் சிந்துவது என்பது பொருள்.

நாவலந் தீவில் முன் உண்டானது போன்ற குழப்பங்கள் நேரவில்லை. மக்கள் அமைதியுடன் வாழ்ந்தார்கள். அவர்கள் பெருகத் தொடங்கினர். பலவகைத் தொழில்கள் தலையெடுத்தன. நாடு நகரங்கள் உண்டாயின. தமிழ் நாடு முழுவதையும் ஓர் அரசன் ஆண்டான். பின்பு நாடு மூன்றாய்ப் பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு நாட்டையும் ஒவ்வொரு அரசன் ஆண்டான். மேற்குக் கடற்கரையை ஆண்ட அரசனின் பெயர் சேரன். அவனாட்சிக்கு உட்பட்ட பகுதி சேரநாடு எனப்பட்டது. சேரனுக்குக் கொடி, வில்; மாலை, பனங் குருத்து. கிழக்குப் பிரிவை ஆண்ட அரசன்

சோழன் எனப்பட்டான். அவன் ஆட்சிக்குட்பட்ட பிரிவு சோழநாடு எனப்பட்டது. சோழனுக்குக் கொடி, புலி ; மாலை, ஆத்தி. தெற்குப் பிரிவை ஆண்ட அரசனுக்குப் பாண்டியன் என்பது பெயர். பழைய அரசன் இருந்த நாடு இது ஆதலின் இது பண்டு நாடு எனப்பட்டது. பண்டு நாட்டை ஆண்ட அரசர் * பாண்டியர் எனப்பட்டனர். பண்டுநாடு பின்பு பாண்டி நாடு எனப்பட்டது. சிலர், பாண்டியர் என்பது பாரதக் கதையிற் கூறப்படும் பாண்டுவின் பெயரினின்றும் வந்ததென்பர். பாண்டுவுக்கு முன்னே பாண்டியர் உளர். ஆதலின் அது அறப் பொருந்தாது.

இம் மூவேந்தரும் பேரரசர் எனப்பட்டார்கள். இவர்கள் நாடுகளில் சிற்றரசர் பலர் ஆண்டனர். இவர்கள் பேரரசர்களுக்கு அடங்கி நடந்தார்கள். சிலர் அடங்காதும் இருந்தார்கள். இக்காரணத்தினால் இடையிடையே அவர்களுக்கிடையில் போர்கள் மூள்வது உண்டு.

மக்கள் வாழ் இடங்களும் அதனைச் சூழ்ந்த விளைநிலங்களும் அடங்கிய பாகம் கிராமம் அல்லது ஊர் எனப்பட்டது. கிராமங்கள் பல சேர்ந்தது கூற்றம் ; கூற்றங்கள் பல சேர்ந்தது நாடு. இவ்வாறு நாடு பல உட்பிரிவுகளாக்கப்பட்டுக் கிராம சபைகளால் ஆளப்பட்டது. கிராம சபைகள் எல்லாவற்றுக்கும் தலைவனாக அரசன் இருந்தான்.

* பாண்டியர் என்பதிலுள்ள இயர் என்பது ஐயர் என்பதன் திரிபு. முற்காலத்தில் கடவுளுக்கும் அரசனுக்கும் ஐயன் என்னும் பெயர் வழங்கிற்று. பண்டு ஐயன் பாண்டியனாயிற்று.



அரசன் வாழும் பட்டணம் நகர் எனப்பட்டது. அரசனின் வீட்டுக்குக் கோயில் என்பது பெயர். கோயிலைச்சுற்றி மதில் இருந்தது. அரண் என்பது மதிலுக்கு மற்றொரு பெயர். அரசனது வீட்டைச் சூழ்ந்து அரண் இருந்தமையின் அது அரண்மனை எனப்பட்டது. அரண்மனையைச் சூழ்ந்து அரச குடும்பத்தினரும் அவன் கருமகாரரும் வாழ்ந்தார்கள். இவர்கள் வாழும் வீதிகளைச் சூழ்ந்து ஒன்றன்பின் ஒன்றாகப் பல வீதிகள் இருந்தன. அவ்வீதிகளில் ஆடை நெய்வோர், அணிகலன் செய்வோர் முதலிய பல தொழிலாளரும் வணிகரும் வாழ்ந்தனர். இவ்வீதிகள் எல்லாவற்றையும் சூழ்ந்து மதில் இருந்தது. அதனைச் சூழ்ந்து பெரிய அகழி யிருந்தது. அது ஆழமும் அகலமும் நீர் நிறைவும் உடையது. அகழியைச் சூழ்ந்து மரங்கள் வளர்க்கப்பட்டிருந்தன.

---

## 5. மொகஞ்சொதரோத் தமிழர்

தென்னிந்தியாவிலே மக்கள் பெருகத் தொடங்கினார்கள். அவர்கள் வடக்கே செல்ல முடியாதபடி தண்டகம் என்னும் பெரிய காடு கிடந்தது. கடற்கரைப் பக்கங்களில் வாழ்ந்த மக்கள் பலர் குடியேற்ற நாடுகளை நாடிக் கடல் வழியே சென்றனர். இவ்வாறு சென்றவர்களுள் ஒரு சிலர் சிந்துநதி முகத்துவாரத்தை யடைந்தனர். அவ்வாற்றோரங்கள் மிகச் செழிப்புடையன. அங்கு இம்மக்கள் தங்கினார்கள்; ஆற்றினின்றும் நீரை வாய்க்கால்களாற் பாய்ச்சி வேளாண்மை செய்தார்கள். தானியங்கள் நன்றாய் விளைந்தன. அங்கு குடியேறிய மக்களின் தொகை பெருகத் தொடங்கிற்று. அவர்கள் சிறிது சிறிதாகச் சிந்துநதி வெளி முழுமையிலும் குடியேறி வாழ்ந்தார்கள். இம்மக்கள் கட்டி வாழ்ந்த இரண்டு பெரிய பட்டினங்கள் மண்ணினால் மூடுண்டு நீண்ட காலம் அறியப்படாமற் கிடந்தன. அண்மையில் அந்நகரங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. அப்பட்டினங்கள், இப்பொழுது அரப்பா, மொகஞ்சொதரோ என்று வழங்குகின்றன. பட்டினங்கள் இரண்டிற்கும் இடையிலுள்ள தொலை நானூறுமைல். இரண்டு நகரங்களிலும் வாழ்ந்த மக்களின் நாகரிகமும் ஒரே வகையாக வுள்ளது. இதனால் அக்காலத்தே தமிழ் மக்கள் மிக அகன்ற இடப்பரப்பிற் குடியேறி யிருந்தார்கள் என விளங்குகின்றது.

இப் பட்டினங்களில் பழந் தமிழரின் நாகரிகக் குறிகள் பல கிடைத்தன; இவைகளைக் கண்டு உலகமே வியப்படைந்தது. இக்கால மக்கள் தாமும் அவ்வகை அழகிய நகரங்களை அமைக்க மாட்டார்கள். நகரங்களின் இடையிடையே அகன்ற வீதிகள் நீளமாகச் செல்கின்றன. அவைகளை ஒடுங்கிய வீதிகள் பல குறுக்கே கடக்கின்றன. வீதிகளின் இரு பக்கங்களிலும் வீடுகள் வரிசையாகக் கட்டப்பட்டன. சூளையிட்ட செங்கற்கள் கட்டிட வேலைக்குப் பயன்படுத்தப் பட்டன. வீடுகளுக்கு ஒன்றுமுதல் மூன்று மாடிகள் வரையில் உண்டு. அவைகளின் முகப்புகள் அழகிய சிற்ப வேலைப்பாடுகளுடையன. வீடுகளுக்கு உள் முற்றம் உண்டு. உள் முற்றத்தே கிணறு இருந்தது. எல்லா வீடுகளுக்கும் குளிக்குமறை இணைக்கப்பட்டிருந்தது. உள் முற்றத்தே ஆடு மாடுகள் கட்டப்பட்டன. வீட்டிலிருந்து வீதியிலுள்ள சாக்கடை வரையும் வாய்க்கால்கள் இருந்தன. இவை செங்கற்களாற் பதிக்கப்பட்டிருந்தன. கழிவு நீர், வாய்க்கால் வழியே சென்று

வீதியிலுள்ள சாக்கடையில் விழுந்தது. சமைப்ப தற்குத் தனியறை யிருந்தது. இவ்வாறு அமைக் கப்பட்ட அழகிய வீடுகளில் அக்கால மக்கள் வாழ்ந்தார்கள்.

மக்கள் ஆடை நெய்ய நன்கு அறிந்திருந் தனர். ஆடைகளுக்கு அழகிய நிறங்கள் ஊட் டப்பட்டன. குயவர் பலவகையான அழகிய மட் பாண்டங்களைச் செய்தனர். சிலவற்றிற்கு அழ கிய நிறங்கள் பூசப்பட்டன ; அவைமீது செடி, கொடி, பறவை, விலங்கு முதலிய ஓவியங்களும் எழுதப்பட்டன. வீடுகளிற் பயன்படுத்தும் ஏனங் கள் பல செம்பு வெண்கலம் முதலிய உலோகங்க ளாற் செய்யப்பட்டன. ஆடவர் முகத்தை மழித் துக்கொண்டனர். மழிக்கும் கத்திகள் வெண் கலத்தினுற் செய்யப்பட்டன. சிறுவர் பலவகை விளையாட்டுப் பொருள்களை வைத்து விளை யாடினர்.

மகளிர், பொன் வெள்ளி வெண்கலம் செம்பு முதலியவைகளாற் செய்த அழகிய நகை களை அணிந்தனர். முகத்துக்கு மணப்பொடி பூசி னர்; நெற்றியில் சாதிலிங்கப் பொட்டிட்டனர்.

வழிபாட்டிற்குரிய கடவுளரில் சிவன், அம் மன் என்போர் தலைமை பெற்றிருந்தனர். அவர்



களுக்குக் கோவில்கள் இருந்தன. கோவிலின் பக்கத்தே படிக்கட்டுகளுடைய கேணி யிருந்தது. ஆலயங்களுக்குச் செல்வோர் இதில் நீராடினர். கேணியின் பக்கத்தே அறைகள் பல இருந்தன. இவைகளில் நீராடுவோர் தங்கினர். கேணியின் அடியில் ஒரு புறத்தில் பெரிய துவாரம் ஒன்று விடப்பட் டிருந்தது. இதனுல் கேணியின் நீர் இடையிடையே வெளியே போக்கப்பட்டது. அத்துவாரத்தின்கீழ் பெரிய மதகு இருந்தது. கேணியின் பக்கத்தே மூன்று கிணறுகள் இருந் தன. இவைகளிலிருந்து இறைக்கப்படும் நீரால் கேணி நிரப்பப்பட்டது. இங்குக் கூறப்பட்ட வற்றுல் அக்கால மக்கள் எவ்வாறு நாகரிகம் அடைந்திருந்தார்கள் என்பது நன்கு விளங்கு கின்ற தன்றே ?

---

# 6. எகிப்தியர்

தமிழ் நாட்டினின்றும் புறப்பட்ட இன்னொரு கூட்டத்தினர் மேற்கு நோக்கிச் சென்றனர்; அவர்கள் செங்கடல் வழியாக வட ஆபிரிக்காவை அடைந்தனர். அங்கு என்றும் நீர் வற்றாத ஆறு ஒன்று உண்டு. அதற்கு நீல ஆறு (நைல்) என்பது பெயர். அதன் பள்ளத்தாக்குகள் பயிர் இடுவதற்கு மிகவும் வாய்ப்புடையன. இவ்வாற்றோரங்களில் வந்து அக்கூட்டத்தினர் தங்கினர்; நாடு நகரங்கள் உண்டாயின. அங்கு எழுந்த நகரங்களுள் மெம்பிஸ், தீப்ஸ் என்னும் பட்டினங்கள் சிறந்திருந்தன. அம்மக்கள் குடியேறிப் பெருகிய இடம் எகிப்து எனப் பெயர் பெற்றது. எகிப்தில் வாழ்ந்த மக்கள் எகிப்தியர் எனப்பட்டனர்.

எகிப்தியர் பைபிரஸ் என்னும் ஒருவகைத் தாளில் எழுதினார்கள். அவர்கள் நூல்களில் அவர்கள் பண்டு நாட்டினின்றும் வந்து குடியேறினார்கள் எனக் கூறப்படுகின்றது. பண்டு என்பது பாண்டி நாட்டின் பழைய பெயர் என்று முன் பாடம் ஒன்றிற் படித்தோம் அன்றோ?

ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன் எகிப்தியர் தென்னிந்தியாவோடு வாணிகம் நடத்தினார்கள்.



குரங்குக்கும் யானைத் தந்தத்துக்கும் அவர்கள் மொழியில் வழங்கிய பெயர்கள் இன்றும் தமிழில் காணப்படுவன. அவை கவு, எவு என்பன. இவை கவி, இபம் என்னும் தமிழ்ச் சொற்களின் திரிபுகள். தமிழர்களிடையும் பழைய எகிப்தியரிடையும் காணப்பட்ட பழக்கவழக்கங்கள் பெரும்பாலும் ஒரே வகையின. அவர்கள் எழுதுவதற்கு ஓவியங்களைப் பயன்படுத்தினர். ஓவியங்களே தமிழ் மக்களின் எழுத்துக்களாக ஒருகாலத்தில் இருந்தன. அவர்கள் தினமும் பருகும் ஏனங்களைச் சுத்தஞ் செய்தார்கள். குருமார் தோய்த்துலர்ந்த ஆடை யுடுத்தனர்; ஒவ்வொரு மூன்றாவது நாளும் உடல் முழுவதையும் மழித்துக்கொண்டனர்; காலில் மிதியடி தரித்தனர்; இடபத்துக்கும் ஞாயிற்றுக் கடவுளுக்கும் பூசை செய்தனர்; விரதமிருந்தனர்; மரணத்துக்குப்பின் உயிர் நிலைபெறுவதை நம்பினர். இறந்தவர்களை அடக்கம்செய்யும்போது உணவும், அவர்கள் பயன்படுத்தியபொருள்களும் பக்கத்தேவைக்கப்பட்டன. எகிப்தியர்வழிபட்ட தாய்க்கடவுளுக்கு ஊர்தி சிங்கம். எகிப்தியரின் மரக்கலங்கள் இன்றும் இந்திய நாட்டில் காணப்படுவனபோன்றவை.



எகிப்திய மக்கள் பயிருக்கு நீர்ப்பாய்ச்சுவதைக் காட்டும் ஓவியம். கி. மு. 1250 வரையில் வரையப் பட்டது.

எகிப்திய மக்கள் ஆறுயிரம் ஆண்டுகளின் முன் பெரிய கூர்நுதிக் கோபுரங்களைக் கட்டினார்கள். இவை அரசரின் உடலை அடக்கஞ் செய்வதற்காகக் கட்டப்பட்டன. இவை இன்றும் உலக வியப்புகளுள் ஒன்றாக விளங்குகின்றன. இவர்களின் நாகரிகம் மிகப் பழமையுடையது.

---

## 7. சுமேரியர்

மேற்கு ஆசியாவிலே தைகிரஸ் யூபிரதர்ஸ் என்னும் இரண்டு ஆறுகள் ஒன்று சேர்ந்து பாரசீகக் குடாக்கடலுள் விழுகின்றன. அந்த ஆறுகளின் ஓரங்கள் மிகச் செழிப்பு வாய்ந்தன. அங்குக் கூலப்பொருள்கள் (தானியங்கள்) நன்கு விளையும். தமிழ் நாட்டினின்றும் வந்த மக்களின் ஒரு கூட்டத்தினர் அங்குத் தங்குவாராயினர். முன்னர்க் கூறப்பட்ட சிந்து, நீல ஆற்று ஓரங்களிற் போலவே அங்கும் மக்கள் பெருகினார்கள்; நாடு நகரங்கள் உண்டாயின. அங்கு வாழ்ந்த மக்களுடையவும் தமிழருடையவும் நாகரிகங்கள் எல்லாவகையாலும் ஒரே வகையின. அங்குச் சென்று குடியேறிய மக்களின் தலைவர்கள் உவண்ணு, ஓடக்கோன் என அவர்கள் வரலாறுகளிற் காணப்படுகின்றது. உவண்ணு என்னும் பெயர் தமிழரின் ஒரு பிரிவினராகிய துளுவ மக்களின் இடையே வழங்குகின்றது. அதற்குப் பூவின் அண்ணன் என்பது பொருள்.



அம்மக்கள் குடியேறி வாழ்ந்த நாட்டுக்குச் சுமேரியா என்று பெயர். சுமேரியாவின் தலைநகரம் சுசா. அவர்கள் ஆற்று நீரை வாய்க்கால் வழியே வயல்களுக்குப் பாய்ச்சி வேளாண்மை செய்தனர்.

மொகஞ்சொதரோ மக்கள் வழிபட்ட பெரிய கடவுளுக்கு ஆண் என்று பெயர். சுமேரியரும் தமது பெரிய கடவுளை ஆண் என்னும் பெயர் கொடுத்து வழிபட்டனர். ஆண் என்பதிலிருந்தே ஆண்டவன் என்னும் பெயர் வந்திருக்கலாம். அவர்களுடைய தாய்க் கடவுளின் பெயர் அம்மா. நம் தாய்க் கடவுளை நாம் இன்றும் அம்மன் என வழங்குகின்றோம்.

குலநூலார் சுமேரியரும் தமிழரும் ஒரு பொதுத்தோற்றத்தைச் சேர்ந்தவர்கள் எனக்கூறுகின்றனர். இதற்கு, இரு மக்களின் நாகரிகம், மொழி, எழுத்து ஆதியன சான்று பகர்கின்றன.

தைகிரஸ், யூபிரதர்ஸ் என்னும் ஆறுகளின் வடக்கேயுள்ள நாடுகளில் இன்னொரு மக்கட் கூட்டத்தினர் குடியேறி வாழ்ந்தனர். அவர்கள் தமது நாட்டுக்குச், சால்தியா எனப் பெயர் இட்டனர். சால்தியா என்பது சோழதேசம் என்பதன் திரிபு. சோழ நாட்டினின்றும் வந்து குடியேறிய மக்கள் தமது தாய் நாட்டின் பெயரையே குடியேற்ற நாட்டிற்கும் இட்டு வழங்குவாராயினர்.

பிற்காலங்களில் சால்தியாவும் சுமேரியாவும் இணைக்கப்பட்டுப் பபிலோனியா என்னும் பெயர் பெற்றன. பபிலோனியா என்பதற்குப் பகற் கடவுளின் நாடு என்பது பொருள். அது முன்னைக் காலத்தில் தமிழ் மக்களால் பவேரு என வழங்கப்பட்டது. புத்தரின் பழம் பிறப்பைக் கூறும் சாதகக் கதைகள் என்னும் பழைய நூல் ஒன்று உண்டு. அதில் பவேருவைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. அக்காலங்களில் இந்திய மக்கள் மரக்கலங்கள் வழியாகப் பவேருவுக்குச் சென்றார்கள். அங்குப்பறவைகளைக்காண்பது அருமை. இந்திய வணிகர் ஒருமுறை காகம்ஒன்றைப் பவேருவுக்குக் கொண்டு சென்றனர். அந்நாட்டு மக்கள் அதன் வடிவைக் கண்டு அதனைக்கொண்டாடினார்கள். அடுத்தபயணத்தில் அவர்கள் நன்றாய் ஆடும் மயில் ஒன்றைக் கொண்டு சென்றனர். அதன் அழகைக் கண்ட மக்கள் காக்கையின் வடிவினால் வியப்படையவில்லை. இவ்வாறு பவேரு சாதகத்திற் காணப்படுகின்றது. இரண்டாயிரத்து ஐஞ்ஞூறு ஆண்டுகட்கு முன் பவேருவில் கடை வைத்து வாணிகம்


பபிலோனியரின் தந்தைக் கடவுள்.



செய்த தமிழர் ஒருவரின் கணக்கு சூளையிட்ட களி மண் ஏட்டில் காணப்படுகிறது. அத்தமிழரின் விலாசம் மு. ர. சு. வ. ரா. பபிலோன் மக்கள் கனத்த களிமண் தட்டுகளில் குச்சிகளால் எழுதினார்கள் ; எழுதியபின் அவைகளைச் சூளையிட்டுக் காப்பாற்றினார்கள். இவ்வாறு களிமண் ஏடுகளில் எழுதப்பட்ட நூல்கள் பல பபிலோன் நாட்டிற் கண்டுபிடிக்கப்பட்டன.

---

# 8. மேற்கு ஆசியாவிற் குடியேறிய வேறு தமிழர் சிலர்

தமிழ்நாட்டினின்றும் சென்ற வேறு மக்கட் கூட்டத்தினர் சிலர் மேற்கு ஆசியாவின் வெவ்வேறு இடங்களிற் குடியேறினார்கள். இவர்கள் பலஸ்தீனியர், பொனீசியர், சீரியர், அசீரியர், சின்ன ஆசிய மக்கள் என்போர். இவர்கள் நாடுகளைப் படத்தில் பாருங்கள். பலஸ்தீனியர், யூதர் அல்லது எபிரேயர் எனவும் படுவர். இவர்கள் தமிழர்களைப்போலவே பிறப்பு இறப்பினால் தீட்டு உண்டு என்றனர் ; தீட்டுக்காலங்களில் அவர்கள் ஆலயங்களுட் செல்வதில்லை ; தூய

பொருட்களைத் தீண்டுவதும் இல்லை. அவர்கள் மரங்களின் கீழ் சிவலிங்கங்களை வைத்து வழிபட்டனர். சிவன் என்னும் கடவுளையும் அவர்கள் வழிபட்டார்கள். சிவன் என்பது அம்மக்களின் மொழியில் சியன் எனத் திரிந்து வழங்கிற்று. இடபத்தையும், பாம்பையும் அவர்கள் வழிபட்டார்கள். நமது ஆலயங்களிலும் இடபம், பாம்பு முதலிய சிலைகள் உள்ளன. இவை மாத்திரமல்ல இன்னும் அவர்களின் பழக்க வழக்கங்களும் தமிழ்நாட்டிற் காணப்படுவன போன்றன.



அராபியர் யூதரின் சிவலிங்கங்கள்.

பலஸ்தீனத்துக்கு மேற்பகுதியிற் குடியேறினோர் பொனீசியர் எனப்பட்டார்கள். பொனீசியா என்பது பனை நாடு என்பதன் திரிபு என்று கருதப்படுகின்றது. அங்குப் பேரீந்து எனப்படும் பனைகள் அதிகம். அவர்கள் தென்னாட்டு ஆலயங்களைப்போலவே பெரிய கோயில்கள் கட்டினார்கள். அங்கு அவர்கள் சிவலிங்கங்களை வைத்து வணங்கினார்கள். அவர்களின் எழுத்து, பிராமி எனப்பட்ட முற்காலத் தமிழ் எழுத்தினின்றும்



பிறந்தது. பிராமி எழுத்து மொகஞ்சொதரோ எழுத்தினின்றும் தோன்றியது.

பொனீசியாவுக்கு வடக்கே குடியேறிய மக்கள் சீரியர் எனப்பட்டனர். இங்கு இடபத்தின் மீது நிற்கும் சிவன் சிலைகள் காணப்படுகின்றன; சிங்கத்தின்மீது வீற்றிருக்கும் தாய்க்கடவுள் வடிவங்களும் இருக்கின்றன. இவர்களின் கடவுள் வழிபாடு தமிழரின் கடவுள் வழிபாட்டை மிக ஒத்தது. அவர்கள் நாகரிகமும் பழந்தமிழர் நாகரிகம் போன்றதே. சீரியாவுக்கு வடகிழக்கிற் குடியேறிய மக்கள் அசீரியர் எனப்பட்டனர். தமிழரில் ஒரு பிரிவினர் அசுரர் எனப்பட்டார்கள். இரணியன், சூரன் எனப் புராணங்களிற் கூறப்படுவோர் அசுரர். இவர்கள் அக்காலத்தில் சிறந்த நாகரிகமும் வலிமையும் பெற்றிருந்தனர். இவர்கள் சிவனையே வழிபட்டனர். அசுரரில் ஒரு பிரிவினரே அசீரியர் என்று கருதப்படுகின்றனர்.


சீரியரின் சிவன் சிலை.

சின்ன ஆசிய மக்களின் மொழி தமிழுக்கு இனமுடையதாகக் காணப்படுகின்றது. அந்

நாட்டு மக்கள் சிவனையும் காளியையும் வழிபட்டனர். இடபத்தின்மீது நிற்கும் சிவன் கடவுட் சிலைகளும் சிங்கவாகனத்தின் மீது இருக்கும் தாய்க்கடவுளின் சிலைகளும் அங்குக் காணப்படுகின்றன. மேற்கு ஆசியா முழுமையிலும் வாழ்ந்த எல்லா மக்களின் நாகரிகமும் ஒரு வகையினது.



சின்ன ஆசிய மக்களின் தாய்க் கடவுள்.

கிரீசுக்குத் தெற்கில் கிரேத்தா என்னும் ஒரு தீவு இருக்கின்றது. அங்கு வாழும் மக்களும் தமிழ் நாட்டினின்றும் சென்று குடியேறினோராவர். இவர்கள் தமிழர் என்றே முற்காலத்தில் மற்றவர்களால் சொல்லப்பட்டார்கள். இவர்கள் நாகரிகம் மொகஞ்சொதரோ மக்களின் நாகரிகம் போன்றது. ஸ்பெயின் தேசத்திலும் தமிழ் மக்கள் குடியேறி யிருந்தார்கள். அங்கு வழங்கிய பழைய மொழி பாஸ்க்கு எனப்பட்டது. அது தமிழோடு மிக ஒற்றுமையுடையது. இத்தாலியில் வாழ்ந்த மக்களும் தமிழர்களே யாவர். ஒரு காலத்து இந்தியா முதல் அயர்லாந்து வரையும் தமிழர் பரவி யிருந்தனர்.

---

# 9. ஆரியர்

நாலாயிரம் ஆண்டுகட்கு முன் இந்திய நாட்டுக்குப் புதிய மக்கட் கூட்டத்தினர் ஒருவகையினர் வந்தனர். அவர்கள் மத்திய ஆசியாவில் வாழ்ந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் ஆடு மாடுகளை மேய்த்து அவை கொடுக்கும் பால் முதலிய பயன்களைக்கொண்டு வாழ்ந்தனர். ஒரு காலத்தில் பல ஆண்டுகள் மழை இன்மையால் அவர்களின் ஆடுமாடுகள் மேய்வதற்கு எவ்விடத்தும் புல் கிடைக்கவில்லை. அதனால் அவர்கள் கூட்டங் கூட்டமாகத் தமது ஆடுமாடுகளுடனும் பெண்டு பிள்ளைகளுடனும் பல திசைகளை நோக்கிச் சென்றார்கள். அவ்வாறு சென்றவர்களுள் ஒரு கூட்டத்தினர் இந்தியாவின் வடமேற்கே உள்ள கைபர் கணவாய் வழியாக இந்தியாவுக்குள் புகுந்தனர். அவர்கள் புகுந்தபோது இந்தியா முழுமையிலும் வாழ்ந்துகொண்டிருந்தோர் தமிழ் மக்களே யாவர்.

ஆரியர் நிறத்தில் வெண்ணிறமுடையோர். உலகில் மக்களின் நிறங்கள் வெவ்வேறாகக் காணப்படுதற்குச் சில இயற்கைக் காரணங்கள் உண்டு. இவ்வுலகில் எல்லா இடங்களும் ஒத்த வெப்ப தட்ப நிலையுடையன வல்ல. இடங்களின்

வெப்ப தட்ப நிலைகளுக் கேற்ப மக்களின் நிறம் மாறுபடுகின்றது. பூமியின் நடுக்கோட்டை (மத்திய இரேகை) அடுத்த நாடுகள் மிக வெப்பமுடையன. நடுக்கோட்டில் இருந்து வடக்கு அல்லது தெற்கு நோக்கிச் செல்லச் செல்லப் படிப்படி கருமைகுறைந்து வெண்மை அடைந்த மக்களைக் காணலாம். மத்திய தரைக்கடலை அடுத்த நாடுகளில் தமிழர் சென்று குடியேறினர்கள் என முன் பாடங்களிற் படித்தோம். அம்மக்களின் ஒரு கூட்டத்தினர் வட துருவ நாடுகளில் நீண்ட காலம் வாழ்ந்து வெண்ணிற மடைந்தனர். அவர்களே பின்னர் மத்திய ஆசியாவிற் றங்கிப் பின் இந்தியாவுக்குள் நுழைந்த ஆரியராவர்.

இந்தியாவை அடைந்த ஆரியர் அங்குத் தமது மாடு முதலியன மேய்வதற்கு ஏற்ற புல் வளர்ந்திருப்பதைக் கண்டனர். தொடக்கத்தில் அவர்கள் இந்தியாவின் வடமேற்குப் பகுதிகளில் தங்கி வாழ்ந்தனர். அவர்கள் வந்த வழியைப் பின்பற்றி இன்னும் அவர் கூட்டத்தினர் பலர் வந்தடைந்தார்கள்.

அவர்கள் அங்குத் தங்கிப் பெருகலாயினர். அவர்கள் அங்கு வாழ்ந்துகொண்டிருந்த தமிழர்களை வென்று நிலங்களைத் தமக்குச் சொந்தமாக்க விரும்பினர்கள். ஆரியர், தமிழரிலும் பார்க்க



உடல் வலியும் முரட்டுத் தன்மையும் உடையவர்களாயிருந்தனர். அவர்களிடத்தில் குதிரைகளும் இருந்தன. ஆரியர் வருகைக்கு முன் தமிழர் குதிரையைப்பற்றி அறிந்ததில்லை. தமிழர் நாகரிக உயர்வும் அமைதியும் உடையவர்களாய் வாழ்ந்துகொண்டு இருந்தனர்.



## 10. ஆரியர் தமிழர் போர்

ஆரியருக்கும் தமிழருக்கும் இடையில் நீண்டகாலம் போர் நடந்தது. ஆரியர், தமிழரை வென்று சிறிது சிறிதாகப் பஞ்சாப் மாகாணம் முழுவதையும் கைப்பற்றினர்கள் அவர்கள் அம் மாகாணத்தைக் கைப்பற்றுவதற்கு அறுநூறு ஆண்டுகள் சென்றன. அவர்கள் தமக்கு வெற்றியை வேண்டித் தாம் வழிபட்ட கடவுளர் மீது பல துதிப்பாக்களைப் பாடினர்கள். அப்பாடல்களில் அவர்கள் தாம் எதிர்த்துப் போராடிய தமிழர்களைப் பற்றியும் கூறியிருக்கிறார்கள். அக்கூற்றுக்களால் அக்காலத் தமிழரின் நாகரிகம் எவ்வகையினது என்று நாம் அறிந்துகொள்ளலாம். அவர்களுடைய பாடல்களில் தமிழர் தாசர் என்று கூறப்பட்டிருக்கின்றனர்.

அக்காலத்தில் தமிழர் மதிலாற் சூழப்பட்ட பெரிய நகரங்களில் வாழ்ந்தார்கள். அவர்களிடத்தில் நிலம் ஆடு, மாடு முதலிய செல்வப் பொருள்கள் இருந்தன. மக்கள் பொன், வெள்ளி முதலியவைகளாற் செய்யப்பட்ட பலவகை அணிகலன்களைப் பூண்டார்கள். அவர்களின் கடவுளர் பொன், வெள்ளி, செம்பு முதலியவைகளாற் புனையப்பட்ட கோயில்களில் வைத்து வழிபடப்பட்டனர். தேர், குதிரை, காலாள் முதலிய படைகள், அவர்களிடத்தில் இருந்தன. இவ்வாறு ஆரியர் தாமே தமிழரின் செல்வத்தையும் நாகரிகத்தையும் பற்றித் தமது பாடல்களில் நன்கு எடுத்துக் கூறி யிருக்கின்றனர்.

அக்கால ஆரியரது சிறந்த கடவுள் இந்திரன். அவர்கள், தமக்கு வெற்றியை அளிக்குமாறு இந்திரன் மீது பல பாடல்கள் பாடினார்கள். தமிழர் ஆரியரின் கடவுளர்களை ஏற்றுக் கொள்ளவில்லை. இக்காரணத்தினாலும் அவர்களுக் கிடையில் போர்கள் நடந்தன.

படை எடுப்பு வாணிகம் போன்ற காரணங்களால் பல சாதியினருக்கிடையே கலப்பு உண்டாகின்றது. ஆரியர் கலப்பின்றி நீண்டகாலம் வாழவில்லை. புறத்தே இருந்துவந்த ஆரியரிலும் பார்க்க இந்தியாவில் வாழ்ந்துகொண்டிருந்த தமிழர் மிகப் பலர். இவ்விரு சாதியினருக்கு மிடையில் கலப்புமணஞ் செய்வதில் தடை ஏற்படவில்லை. இரு மக்களுக்கு மிடையில் கலப்பு மணங்கள் நிகழ்ந்தன. புதிய மக்கள் தோன்றினார்கள். அவர்கள் தம்மை ஆரியர் என்றே சொல்லிக்கொண்டனர். அவர்கள் சிறிது சிறிதாகக் கங்கைச் சமவெளி வரையிற் சென்று தமது வெற்றியை நாட்டினர். ஆரியர் வழங்கிய மொழி பிராகிருதம் எனப்பட்டது. வடக்கே வாழ்ந்த தமிழர் பிராகிருதச் சொற்களைத் தமிழுடன் கலந்து பேசினர். பேசுமிடத்து அச் சொற்களைத் திரித்து வழங்கினர். ஆரியர் பிராகிருதத்துடன் தமிழ்ச் சொற்களைக் கலந்து வழங்கினர். அவர்களும் தமிழ்ச் சொற்களைப் பிறழ உச்சரித்தனர். இக்காரணங்களால் வடக்கே பல மொழிகள் தோன்றலாயின. நாள் ஏற ஏற ஆரியர் தமிழரின் கொள்கைகளையே பின்பற்றுவாராயினர். அவர்கள் தமிழரின், சிவன், உமை முதலிய கடவுளரை வழிபட்டனர். அவர்களின் இந்திரன், பிரமா, வருணன் முதலிய கடவுளர் சிறு தெய்வங்களாயினர். இவ்வாறு இந்திய மக்கள் எல்லோரது நாகரிகமும் தமிழர் நாகரிகமாக மாறியுள்ளது. தமிழரின் கொள்கைகள் அல்லாதன சிலவும் அதன் இடை இடையே காணப்படுகின்றன.

## 11. தமிழர் சாதிகளும் ஆரியர் வருணங்களும்

தமிழ்நாட்டில் சாதி எப்படித் தோன்றிற்று என்று முன் பாடங்களிற் படித்தோம். வடநாட்டார் சாதிகளை நிறம்பற்றிப் பிரித்தனர். ஆகவே அவர்கள் செய்த சாதிப் பிரிவு வருணம் எனப் பெயர் பெற்றது. வருணம் என்பதற்கு நிறம் என்று பொருள். ஆரியரிற் பிராமணர் முதற் குலத்தினராவர். இரண்டாங் குலத்தினர் சத்திரியர் எனப்பட்டனர். சத்திரியர் என்பதற்கு அரசர் அல்லது போர் வீரர் என்பது பொருள். மூன்றாங் குலத்தினர் வைசியர். அவர் வாணிகத் தொழில் நடத்துவர். நான்காவது குலத்தினர் சூத்திரர். அவர்கள் போரில் சிறையாகப் பிடிக்கப்பட்டோரும் பரம்பரையாக அடிமைத் தொழில் புரிவோருமாவர். ஆகவே சூத்திரர் என்பதற்கு அடிமைகள் அல்லது வேலைக்காரர் என்பது பொருள். வடநாட்டாரின் வருணப் பிரிப்புக்குப் பிறப்பே காரணம். பிறப்புரிமையை வலுப்படுத்துவதன் பொருட்டுப் பல கட்டுக் கதைகள் எழுந்தன. பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்போர் முறையே பிரமாவின் முகம், தோள், தொடை, கால்களினின்றும் பிறந்தார்கள் என்பது அக்கதைகளுள் ஒன்று. இதனை மக்கள் நீண்டகாலம் உண்மையென நம்பிவந்தனர். சாதிக் கட்டுப்பாட்டை வலுப்படுத்துவதற்கு கட்டப்பட்டதோர் கதையே இதுவாகும்.

ஒவ்வொரு வருணத்தவர்களும் ஒழுகவேண்டிய ஒழுக்க முறைகள் அவர்கள் நீதி நூல்களில் எழுதப்பட்டுள்ளன. ஒவ்வொரு வருணத்துக்கும் வெவ்வேறு ஒழுக்கங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. வருண தருமங்கள் சமயத்தோடு இணைக்கப்பட்டிருந்தன. அவர்கள் நீதி நூல்கள் வருணத்துக்குத் தக்கவாறு நீதிகள் விதித்துள்ளன. தமிழர் பிறப்பினால் சாதி இல்லை; ஒழுக்கத்தினாலும், செய் தொழிலினாலும் சாதி உண்டு என்றனர். "பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா-செய்தொழில் வேற்றுமையால்" எனத் திருவள்ளுவனாரும் ஆணை இடுவாராயினர்.

> " வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
> உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி"

என்னும் செய்யுளில் தமிழர் ஆரியர் நீதிகளின் உயர்வு தாழ்வுகள் நன்கு கூறப்பட்டிருத்தல் காண்க.

தமிழ்நாட்டில் மக்கள் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நாற்குலத்தினராகப் பிரிக்கப்பட்டிருந்தார்கள். இவர்கள் உலகின் எல்லாப் பாகங்களிலும் காணப்படும் குரு

மார், அரசர், வியாபாரிகள், பயிரிடுவோர் என்பவர்களை ஒத்தவர்களே யாவர். இவர்களை அன்றிப் பலவகைத் தொழில்கள் புரிவோரும் வாழ்ந்தனர்.

தென்னாட்டில் ஆரியக் கொள்கைகள் ஒரு காலத்திற் பரவத்தொடங்கின. அப்பொழுது தமிழர் நாற்குலங்களுக்கும் பதில் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் பெயர்கள் முறையே வழக்கத்தில் வந்தன. வேளாண் மக்கள் சூத்திரர் என்னும் பிரிவினராகக் கருதப்பட்டார்கள். அதனை ஏற்றுக்கொள்ள ஒருப்படாத வேளாண் மக்கள் தம்மைச் சற்சூத்திரர் என்றும், பூவைசியரென்றும் பலவாறு கூறிக்கொள்வாராயினர். வேளாளர் சூத்திரரும் அல்லர் வைசியரும் அல்லர்.

---

## 12. ஆரியர் வேதங்கள்

ஆரிய மக்கள், இந்தியாவை அடைந்தபின் தங்கள் கடவுளர் மீது பாடிய பாடல்களின் திரட்டு வேதம் எனப்படும். வேதங்கள் பாடப்பட்ட காலத்தில் ஆரியர் எழுத்தெழுதும் முறையை அறியாதிருந்தனர். ஆகவே ஒருவர் பாட மற்றவர்கள் கேட்டு அப்பாடல்களை நெட்டுருச் செய்தனர். நீண்டகாலம் எழுதப்படாது



செவி வழக்கில் வந்தமையின் அவை எழுதாக் கிளவி என்னும் பெயர் பெற்றன. அப்பாடல்கள் மூன்றாகப் பிரிக்கப்பட்டு இருக்கு எசுர் சாமம் என்னும் பெயர் பெற்றன. பின்பு அதர்வணம் என்னும் ஒரு வேதமும் சேர்க்கப்பட்டு வேதங்கள் நான்கு ஆயின. அவை தமிழர் வழிபட்ட கடவுளர் மீது பாடப்பட்டனவல்ல.

ஆரியர் தமிழர்களைப்போல ஆலயங்களை அமைத்து அவைகளிற் சென்று கடவுளை வழிபடவில்லை. அவர்கள் வேள்விச் சாலைகள் அமைத்து அவைகளில் பெரிய வேள்விகள் செய்தனர். வேள்விகளில் பல விலங்குகள் பலியிடப்பட்டன. நூறு வேள்வி வேட்கின்றவன் இந்திர பதவியை அடைகின்றான் என்று அக்கால அரசர் நம்பினார்கள். இந்திரன் வானுலகத்துக்கு அரசன் என ஆரியமக்கள் நம்பிவந்தனர்.

வேதங்களுக்குப்பின் ஆரணியகங்கள் என்னும் நூல்கள் எழுந்தன. அவை, முதுமைக் காலத்திற் காட்டிற் சென்று தவஞ்செய்வோர் படிப்பதற்காக எழுதப்பட்டவை.

ஆரணியகங்களுக்குப்பின் பிராமணங்கள் என்னும் நூல்கள் எழுதப்பட்டன. பிராமணங்கள் வேள்விக் கிரியைகளைப்பற்றி விரிவாகக் கூறும் நூல்கள். அந்நூல்களிற் பயிற்சியடைந்

தோர் பிராமணர் எனப்பட்டனர். அவை கூறும் வேள்விமுறைகள் தமிழர்க்குரியன வல்ல. பிராமணரும் தமிழ் மரபின ரல்லர். ஒரு காலத்தில், சமக்கிருதம் தேவமொழி என்றும், தமிழ் மனிதமொழி என்றும் மக்கள் தமது அறியாமையால் நம்பத் தலைப்பட்டார்கள். அப்பொழுது தென்னாட்டு ஆலயங்களுக்கு வழங்கிய தமிழ்ப் பெயர்களுக்குப் பதில் வடமொழிப் பெயர்கள் இடப்பட்டன. தமிழ் அந்தணரான பார்ப்பனருக்கும் பிராமணர் என்னும் பெயர் வழங்குவதாயிற்று. இதனாலேயே பார்ப்பனர் ஆரியரே என்னும் தவறான கருத்து ஏற்படலாயிற்று.

## 13. தமிழ் மறை

தமிழ் மக்களிடம் மிகப் பழங் காலத்திலேயே மறைகள் இருந்தன. மறை என்பதற்குப் பிறர் அறியாவண்ணம் மறைத்துச் சொல்லப்படுவது என்பது பொருள். வேதம் என்பதற்கும் பொருள் இதுவே. உண்மையில் ஆரிய வேதங்கள் மறைகள் ஆகமாட்டா. அவை மறைத்துக் கூறப்படுவன வல்ல. தமிழர் அறிந்திருந்த சமய உண்மைகள், குரு மாணாக்க முறையில் தொன்றுதொட்டு வந்தன. அவற்றைக் கேட்கும் தகுதி அடைந்தவர்களுக்கு மட்டும் அவை



வெளியிடப்பட்டன. ஆரிய வேதங்கள் சூத்திரருக்கும் பெண்களுக்கும் மட்டும் மறைக்கப்பட்டிருந்தன.

தமிழ் மொழியிலுள்ள மிகப் பழைய நூல், தொல்காப்பியம். அது, தமிழில் அறம் பொருள் இன்பம் என்னும் முப்பொருள்கள் பற்றியே நூல்கள் செய்யப்படும் எனக் கூறுகின்றது. ஆகவே தமிழ் மறைகள் நூல்களாக இருந்தில என நாம் நன்கு அறியலாகும்.

ஆரியர், தமிழரிடமிருந்து அவர்கள் சமய உண்மைப் பொருள்களை அறிந்தனர். அவர்கள் அவ்வுண்மைப் பொருள்களை அமைத்து உபநிடதம் என்னும் நூல்களைச் செய்தனர். உபநிடதமென்பதற்குக் குரு மாணாக்க முறையில் கிட்ட இருந்து கேட்கப்படுவது என்பது பொருள். உபநிடதங்களிற் கூறப்படுவனவே தமிழரின் மறை என்று சொல்வதற்குரிய பல காரணங்கள் உண்டு. அவை ஓங்காரத்தின் பெருமையைக் கூறுகின்றன. வடமொழியில் ஒகரமாகிய குறில் இல்லை. குறிலின் நீட்டமே நெடில் ஆகும். இதனால் ஓம் என்னும் பிரணவம் தமிழருக்கே உரியது என்று விளங்குகின்றது.

பிராமணர் அரச வகுப்பினரிடம் மாணாக்கராயிருந்து உபநிடத ஞானங்களைப் பயின்ற

னர். ஆரிய வேதங்கள் சூத்திரருக்கும் பெண்களுக்கும் மட்டும் மறைக்கப்பட்டிருந்தனவென்பது முன் கூறப்பட்டது. வேதங்களைப் பிராமணன் மட்டும் ஆசிரியனாக விருந்து மூன்று வருணத்தவர்களுக்கும் ஓதலாம் என அவர்கள் நீதி நூல்கள் கூறுகின்றன. பெண்களும் அரசரும் அரசர் அல்லாதாரும் உபநிடத ஞானங்களில் பயிற்சியடைந்திருந்தார்கள். இக்காரணங்களினால் உபநிடதங்களிற் கூறப்படும் உண்மை ஞானங்களே தமிழரின் மறை என்று தெளிவாகின்றது.

தமிழரின் மறை எழுதப்படாது செவி வழக்கில் நீண்டகாலம் வந்தது. ஆதலின் அது எழுதாக் கிளவி எனப்பட்டது. தமிழ்மறைப் பொருள்களைத் திரட்டித் திருமூலநாயனார் திருமந்திரம் என்னும் நூலாகச் செய்தார். திருமந்திரத்திற் காணப்படும் உண்மைகள் தேவார திருவாசகங்களிலும் காணப்படுகின்றன. இவைகளின் பொருள்களைச் சாரமாகக் கொண்டனவே தமிழர் போற்றும் சைவ சித்தாந்த நூல்களாகும். ஆரியரின் மதம் தென்னாட்டிற் பரவிய காலத்தில் தமிழரின் மறை என்பது ஆரியரின் வேதம் எனத் தவறாகக் கருதப்படலாயிற்று.

---

# 14. பார்ப்பனர்

தமிழர் மிகப் பழைமை தொட்டே கோவில்களை அமைத்து அவைகளில் கடவுளின் அருட்



சிந்துவெளித் தமிழர் 5,500 ஆண்டுகளின் முன் வைத்து வழிபட்ட அருட்குறி (சிவலிங்கம்)

குறிகளை வைத்து வழிபட்டு வருகின்றனர். ஆதியில் கோவிற்குரு அரசனாக விருந்தான். பின்பு அரசனுக்கு அடுத்தபடியிலிருந்த மேன்மக்கள் குருமாராயினர். அக்குருமார் பல தகுதியினராகப் பிரிக்கப்பட்டிருந்தனர். கோவிற் கருமங்களைப் பார்ப்போர் பார்ப்பார் எனப்பட்டனர். பார்ப்பார் என்பதற்குக் கண்காணிப்பவர் என்பது பொருள். கடவுளுக்கு ஐயன் என்பதும் ஒரு பெயர். ஐயனைச் சேவிப்பவர்கள் ஐயர் எனப் பெயர் பெற்றனர். ஐயர், பார்ப்பார் என்போர் தமிழ்மக்களே.

முற்காலங்களில் குருமார் செல்வாக்குடைய வர்களாயிருந்தனர். மக்கள் அவர்களிடத்தில் பெரிதும் நம்பிக்கை வைத்திருந்தனர். அவர்கள் கடவுளுக்கு அண்மையில் உள்ளவர்கள் எனக் கருதப்பட்டனர். அரசனும் அவர்களுக்கு மிகுந்த வணக்கம் செய்தான். அரசனுக்கு அறிவு கூறுவோரில் பார்ப்பானும் ஒருவனுக விருந்தான். பார்ப்பானே பெரும்பாலும் அரச னது அமைச்சனுப் இருந்தான். இதனை மாணிக்கவாசகர் பாண்டியனுக்கு அமைச்சராக விருந்தமை கொண்டு நன்கு அறிதல் ஆகும். அரசியல் அலுவல்களிலும் பார்ப்பார் இடம் பெற்றனர்.

பிற்காலங்களில் வடநாட்டுப் பிராமணர் தெற்கே வந்தனர். பிராமணங்கள் என்னும் வட மொழி நூல்களைக் கற்றவர்கள் பிராமணராயினர் என முன் கூறப்பட்டது. அவர்களுட் சிலர் பார்ப்பன வகுப்பினரிடையே திருமணக் கலப் புடையராயினர். அவர்கள் தமது மதத்தைத் தென்னுட்டிலும் புகுத்துவாராயினர். பொது மக் கள் அவர்களின் கொள்கைகளுக்கு இணங்க வில்லை. அதனுல் அவர்கள் அரசரைத் தம்வழிப் படுத்தினுர்கள். அவர்களை வேள்விகள் செய்யும் படி தூண்டினுர்கள். வேள்விகளுக்கு அவர்கள் ஆசிரியர்களாகவும் இருந்தனர். அக்காரணத்தி



ஞல் அரச வட்டாரங்களில் பிராமணருக்கு மதிப்பு உண்டாயிற்று. பார்ப்பார் நாளடைவில் தம்மைப் பிராமணர் எனக் கூறுவாராயினர். அவர்களும் வடமொழியைக் கற்றுப் பிராமணங் களைப் பயின்றனர்; தமக்கு இருக்கு முதலிய வேதங்கள் முதல் நூல்கள் எனவுங் கூறினர்; சமக்கிருதம் தேவ மொழி என அரசரை நம் பச் செய்தனர். அரசர் ஆணையினுல் ஆலயங் களில் சமக்கிருத மொழியில் புகழ்பாடும் வழக்கு ஏற்பட்டது. பார்ப்பனர் தம்மை ஆரியர் எனக் கருதத் தொடங்கினர்; உண்மை அவ்வாறன்று. இப்பொழுது நாம் பார்ப்பாரை ஆரியர் எனக் கருதுகின்ரேும். தமிழரில் பலர் இஸ்லாம், கிறித்துவ மதங்களைத் தழுவி யிருக்கின்றுர்கள். இவர்களை நாம் அராபியர் அல்லது ஐரோப்பியர் எனக் கூறுகின்ரேுமா? இல்லை. அவ்வாறே ஆரியமதத்தைத் தழுவிய தமிழராகிய பார்ப்பன ரும் ஆரியராகமாட்டார். தமிழர் எனக் கூறுவதி லும் தம்மை ஆரியர் எனக் கூறுவதே பெருமை எனப் பார்ப்பன வகுப்பினர் கருதுகின்றனர். வரலாற்றில் ஆரியமக்களே எல்லா மக்களுக்கும் பின்னுல் நாகரிகம் அடைந்தோராவர்.

பார்ப்பனரிடையே வடநாட்டுப் பிராமண ரின் கலப்பு உண்டு என்பது உண்மையே. அவர்

கள் நரம்புகளில் ஓடும் ஆரியக் குருதி ஒரு சிறி தளவேயாகும். இருவேறு நிறமுடைய சாதிகள் கலக்கும்போது இரு நிறங்களுக்கும் இடைப் பட்ட நிறமுடைய மக்கள் தோன்றுகின்றனர். அப்புதிய மக்களின் நிறம் ஏறியும் தாழ்ந்தும் காணப்படுமேல் அது இரு மக்களின் கலப்பின் அளவைக் காட்டுவதாகும். புதிதாக இந்திய நாட்டை அடைந்த ஐரோப்பிய சாதியினருக்கும் இந்திய மக்களுக்கும் தோன்றிய மக்கள் யூரே சியர் எனப்படுகின்றனர். இவர்களில் கருமை முதல் வெண்கலம், வெண்மை வரையில் நிற முடையவர்களைக் காணலாம். இது பார்ப்பனர்க ளிடையில் நிறங்கள் பல்வாயிருப்பதன் கார ணத்தை அறிந்துகொள்வதற்கு ஏற்ற எடுத்துக் காட்டாகும்.

---

## 15. புராணங்கள்

தமிழ் அரசர் அவைகளில் புலவர்கள் இருந்தார்கள். அவர்கள் அரசர்களுடைய வெற் றிகளையும் பிற புகழ்களையும் குறித்துப் பாடினர் கள். அரண்மனைகளில் பலவகை விழாக்கள் நடைபெறுவதுண்டு. அக்காலங்களில் புலவர்கள் அரசனின் முன்னோர்களுடைய பழைய வரலாறு களை எடுத்துச்சொல்வது வழக்கம். ஒவ்வோர்



அரசமரபினருடைய பரம்பரை வரலாறுகளும் இவ்வாறு புலவர்களாற் காப்பாற்றப்பட்டு வந் தன. வடநாட்டு அரசர் அவைகளிலிருந்து அர சர் வரலாறுகளைக் கூறிய புலவர்கள் சூதர் எனப் பெயர்பெற்று விளங்கினார்கள். இதுபற்றியே புராணங்கள் சூத முனிவராற் சொல்லப்பட்டன என்று கூறப்படுகின்றன. இந்திய நாட்டை ஆண்ட அரசரின் வரலாறுகள் ஒருகாலத்தில் எழுதப்பட்டன. அவை புராணம் எனப் பெயர் பெற்றன. புராணம் என்பதற்குப் பழைய வர லாறு என்பது பொருள்.

கோயிற் குருமாராலும் அரசரின் வரலாறு கள் எழுதி வைக்கப்பட்டன. இவ்வாறு செய் தல், இந்தியர் வழக்கு மட்டுமன்று. இலங்கை, மேற்கு ஆசியா, எகிப்து முதலிய நாடுகளிலும், இம்முறை இருந்துவந்தது. இன்று, நிகழ்ச் சிகளை கிறித்துவுக்குப் பின் இத்தனையாவது ஆண்டில் இன்னவை இன்னவை நிகழ்ந்தன என்று குறிப்பிடுகின்றோம். முன்னைக் காலங்க ளில் ஆண்டுகள் இவ்வாறு தொடர்பாகக் கணக் கிடப்படவில்லை; இன்ன அரசன் ஆட்சியில் இத்தனையாவது ஆண்டு என்று கணக்கிடப்பட் டது. அவ்வாறாகவே முற்கால அரசரின் ஆட் சிக் காலங்கள் குறித்துவைக்கப்பட்டிருந்தன.

இற்றைக்கு இரண்டாயிரத்து முன்னூறு ஆண்டு களுக்குமுன் மயூரசந்திரகுப்தன் என்னும் அரசன் வட இந்தியாவை ஆண்டான். அவனுடைய அரண்மனையில் மெகஸ்தினஸ் என்னும் கிரேக்கர் ஒருவர் தங்கியிருந்தார். அவர் இந்தியாவின் வரலாறு ஒன்று எழுதியுள்ளார். அதில் அவர் அலக்சாந்தரின் படை எடுப்புக்குமுன் பாண்டிய நாட்டை ஆண்ட அரசரின் எண் 154 எனக் குறிப்பிட்டிருக்கின்றார். அரசரின் ஆட்சிக்காலங்கள் குறித்து வைக்கப்பட்டில வாயின் அவர் இவ்வாறு கூறியிருத்தல் இசையாது. தமிழர் தமது பழைய வரலாறுகளை எழுதி வைத்ததில்லை எனச் சிலர் கருதுவது தவறு. பழைய கல்வெட்டுக்களையும் புராணங்களையும் நோக்குமிடத்து முன்னர் எழுதி வைக்கப்பட்ட வரலாறுகள் பிற்காலங்களில் சிதைந்து மறைந்தொழிந்தன என்பது விளங்குகின்றது. திருவிளையாடற் புராணத்தில் மதுரையை ஆண்ட அரசரின் வரலாறுகளைக் காண்கின்றோம். புராணக் கதைகள் நம்பத்தக்கனவல்ல எனப் பலர் கருதுகின்றனர். அதற்குக் காரணம் புராணங்களிற் பல கற்பனைக் கதைகள் காணப்படுதலேயாகும். அக்கற்பனைக் கதைகளின் இடையிடையே சிற்சில இடங்களிற் கூறப்படும் அரசரின் வரலாறுகள் பொருத்தமாயிருக்கின்றன.



ஒருகாலத்தில் பிராமண மதம் இந்தியநாட்டில் தலை எடுத்திருந்தது. அக்காலத்தில் பிராமணர் தமக்கு நலம் பயக்கும் பல கோட்பாடுகளைப் புகுத்தியும் நலம் பயவாதனவற்றை நீக்கியும் கற்பனைக் கதைகளைப் புகுத்தியும் புராணங்களை மாறுபடுத்தினர். இக்காரணங்களே புராணங்கள் வரலாற்று நூல்களாகக் கொள்ளப்படுவதற்குத் தடையாயுள்ளன. பிராமணரால் திருத்தப்பட்டதால் வரலாற்று நூல்களாகிய புராணங்கள் வெறும் சமய நூல்கள் எனக் கொள்ளப்படுகின்றன.

இதிகாசம் என்பதற்கும் பழைய வரலாறு என்பது பொருள். பாரதம் இராமாயணம் முதலிய நூல்கள் இதிகாசங்கள் என வழங்கப்படுகின்றன. அவையும் நீண்டகாலமாகக் கூட்டியும் குறைத்தும் மாற்றியும் எழுதப்பட்டுவந்தன. அதனால் அவைகளும் வரலாற்றுத் தன்மையை இழந்தன. பாரதப்போர் இற்றைக்கு மூவாயிரத்து இருநூற்று ஐம்பது ஆண்டுகளின்முன் நிகழ்ந்ததற்குச்சான்று உண்டு.

---

# 16. தமிழ் நாட்டு இயற்கைப் பிரிவுகள்

இவ்வுலகம், கடல், மலை, காடு, வயல், மணல், வெளி என்னும் இயற்கை அமைப்புகளுடையது. தமிழ் நாட்டின்கண்ணும் இவ் வைவகை இயற்கை அமைப்புக்களை . நாம் பார்க்கலாம். மக்கள், தாம் வாழும் இடங்களுக்கு ஏற்பத் தமது வாழ்க்கை முறையை அமைத்துக்கொள்கின்றனர். இக்காரணத்தினால் தமிழ் நாட்டின் எல்லா இடங்களிலும் மக்கள் ஒரேவகையாக வாழ்ந்திலர். வாழ்க்கை என்பது ஊண், உடை உறைவிடம் என்பவைகளை அடிப்படையாகக் கொண்டது.

---

## மலை நாட்டு மக்கள்

மலைநாடு குறிஞ்சி நிலம் எனப்பட்டது. குறிஞ்சி என்பது ஒருவகை மரம். மலைகளில் இம் மரம் பெரிதும் வளரும். ஆகவே மலைநாட்டுக்குக் குறிஞ்சி நிலம் என்னும் பெயர் வழங்கப் பட்டது. அங்கு வாழும் மக்கள் குறவர், வேடர், கானவர் எனப்பட்டார்கள்.

மலைகளில் தானே வளர்ந்து பயன் தரும் மரங்கள் பல உண்டு. உண்ணுதற் கினிய கிழங்குகளை வீழ்த்தும் கொடிகள் பல காடுகளின் இடையிடையே செழித்துப் படரும். மலைமுகடுகளில் தேன்கூடுகள் தொங்கும். மலைச்சாரல்களில் ஐவனம் என்னும் ஒருவகை மலைநெல் விளையும். மலைகளின் இடையிடையேயுள்ள சமநிலங்களில் சாமை பயிரிடப்படும். மலைநாட்டினர் அங்குக் கிடைக்கும் காய், கனி, கிழங்கு, தேன், மலைநெல், சாமை என்பவைகளைத் தமது முதன்மையான உணவுகளாகக் கொண்டு வாழ்ந்தனர்.

காடுகளில் மான், மரை, பன்றி, புலி, கரடி, யானை முதலிய விலங்குகள் திரிந்தன. மான், மரை, பன்றி முதலிய விலங்குகள் உணவின் பொருட்டு வேட்டையாடப்பட்டன. தோல், நகம் என்பவைகளின் பொருட்டுப் புலிகளும், தந்தத்தின் பொருட்டு யானைகளும் வேட்டையாடப்பட்டன.

பருவம் அறிந்து சாமை விதைக்கப்பட்டது. பயிரிடப்படும் இடம் கொல்லை எனப்பட்டது. காட்டு விலங்குகள் பயிரை மேய்ந்து அழித்து விடாதபடி கொல்லையைச்சுற்றி வேலியிடப்பட்டிருந்தது. இராக்காலத்தே யானை பன்றி முதலிய விலங்குகள் கொல்லைக்குட்

புகுந்து பயிரை அழிக்காதபடி பரண்கள்மீதிருந்து குறவர் காவல் காத்தனர். பயிரை மேய வரும் விலங்குகள் கண்டு அஞ்சி ஓடும்படி அவர்கள் நெருப்புக் கொள்ளிகளை பரணின் பக்கங்களில் மாட்டிவைத்தார்கள்; கவணில் கற்களை வைத்து எறிந்து விலங்குகளை ஓட்டினார்கள்.

தினை, கதிர் வந்து முற்றியதும் கிளி முதலிய பறவைகள் கூட்டமாக வந்து தினையை உண்ணும். குறச் சிறுமியர் பகற்காலங்களில் பரண்மீதிருந்து தினைமீது விழும் குருவிகளை ஓட்டினர். அவர்கள் மூங்கில் தடியைக் கிழித்துச் செய்த தட்டை என்னும் கருவியைத் தட்டியும் ஆயோ என ஓசையிட்டும் குருவிகளை ஓட்டினர். தினை விளையும் காலம் குறச் சிறுமியரின் இனிய பொழுதுபோக்குக் காலமாயிருந்தது. குறவரின் குலதெய்வம் முருகன். அவர்கள் வெறி என்னும் ஒருவகைக் கூத்து ஆடியும் பலியிட்டும் முருகக்கடவுளை வணங்கினார்கள். முருகபூசை செய்பவன் முருகன் எனப்பட்டான். அவன் கையில் முருகக்கடவுளின் வேலைப் பிடித்திருந்தான்.

குறவரின் வீடுகள் மலைச்சாரலிலே பலா மரங்களின் கீழ்க் கட்டப்பட்டிருந்தன. அவை தழைகளால் வேயப்பட்ட சிறு குடிசைகள். அவர்கள், தேன், பலாப்பழம் என்பவைகளிலிருந்து ஒருவகைக் கள்ளைச் செய்தார்கள். அக்கள் மூங்கிற் குழாய்களில் இட்டுக் காரமேறும்படி வைக்கப்பட்டது. கள்ளை உண்டு மகிழ்ந்த குறவரும் குறத்தியரும் முற்றத்தே நிற்கும் பலாமரத்தின்கீழ் கைகோத்துக் குரவை என்னும் கூத்து ஆடினார்கள்.

முன்னைக் காலத்தே குறவர் தழைகளையும் மரப்பட்டையையும் உடையாகக் கொண்டனர். பழைய நூல்களில் முனிவர்கள் மர உரியை உடையாக அணிந்தார்கள் எனக் கூறப்படுகின்றது. குறமாதர் குறி சொன்னார்கள். அவர்கள் உடம்பில் பச்சை குத்திக்கொண்டனர்; சங்கு மணிகளைக் கோத்து மாலைகளாக அணிந்தனர். சங்கு வளைகளைக் கையில் இட்டு அழகுசெய்தனர். குங்குமப் பொட்டிட்டனர். பூக்களைத் தலையில் சூடினர்.

---

## 17. முல்லை நில மக்கள்

காடும் காடு சார்ந்த இடங்களும் முல்லை நிலம் எனப்பட்டன. முல்லை என்பது ஒருவகைக் கொடி. காடுகளிலும் காடு சார்ந்த இடங்களிலும் முல்லைக் கொடிகள் செழித்து வளர்ந்தன. அக்காரணத்தினால் அவைகளுக்கு முல்லை நிலம் எனப் பெயர் உண்டாயிற்று. அவ்விடங்களில்

ஆடு மாடுகள் புல் மேய்வதற்கேற்ற மேய்ச்சல் நிலங்கள் இருந்தன. முல்லை நில மக்கள் ஆடு மாடு முதலியவைகளை வளர்த்து அவை தரும் பயன்களையே பெரிதும் தம் உணவாகக்கொண்டு வாழ்ந்தனர். காடு சார்ந்த நிலங்களில் வரகு, அவரை, துவரை முதலிய கூல வகைகளும் விளைவிக்கப்பட்டன.

முல்லை நில மக்கள், ஆயர், இடையர், கோவலர், அண்டர் முதலிய பல பெயர்களாற் குறிப்பிடப்படுவர். அவர்கள் காட்டு ஒதுக்குகளில் சிறு இல்லங்கள் கோலி வாழ்ந்தனர். இல்லங்கள் வரகு வைக்கோலால் வேயப்பட்டன. முற்றத்தே இறுக்கப்பட்ட முளைகளில் இராக்காலங்களில் ஆடு மாடுகள் கட்டப்பட்டன. குடியிருப்பைச் சுற்றி விலங்குகள் நுழையாதபடி முள் வேலி யிடப்பட்டிருந்தது. விடியற்காலத்தே இடைப்பெண்கள் தாழிகளில் உறைந்திருக்கும் தயிரை மத்துப்பூட்டிக் கடைந்தார்கள். அவர்கள் மோரையும் வெண்ணெயையும் அயல் இடங்களுக்குக் கொண்டுசென்று விற்றார்கள். ஆடவர் விடியற்காலத்தே மாடுகளையும் ஆடுகளையும் மேய்ச்சல் நிலங்களுக்கு ஓட்டிச் சென்றார்கள்; அவைகளைப் புலி கோநாய் முதலிய விலங்குகள் கொல்லாதபடி காவல் காத்தார்கள். ஆடுகளும் மாடுகளும் மேயும்



போது அவர்கள் மா நிழல்களில் இருந்து இனிய பண்களைப் புல்லாங்குழலில் வாசித்தனர். கொன்றைப் பழத்தைக் குடைந்து நெருப்புக் கொள்ளியால் துளையிட்டுச் செய்த குழல்களிலும் அவர்கள் இனிய இசைகளை அமைத்துப் பாடினார்கள்.

தமிழரின் செல்வம் ஆடு மாடுகளே ஆகும். மாடு என்னுஞ் சொல் ஒருகாலத்தில் செல்வம் என்னும் பொருளில் வழங்கிற்று. அதனால், மக்கள் ஒருகாலத்தில் மாட்டையே செல்வமாகக் கொண்டிருந்தார்கள் என அறிகின்றோம். ஆடு மாடுகள் மேய்வதற்குப் பொது மேய்ச்சல் நிலங்கள் இருந்தன. அவை குடும்பங்களுக்குச் சொந்தமாயிருந்தன. குடும்பங்களுக்குரிய மேய்ச்சல் நிலங்கள் சிறிது சிறிதாகப் பிரிக்கப்படின் அவை ஆடு மாடுகள் மேய்வதற்கு ஏற்றன வாகா. ஆகவே இடையர் குடும்பங்களாக வாழ்ந்தனர். சொத்துக், குடும்பத்தவர்கள் எல்லாருக்கும் பொதுவாக விருந்தது. குடும்பத்தவருள் மூத்தவன் குடும்பத் தலைவனாயிருந்தான். மற்றவர்கள் அவனுக்கு அடங்கி நடந்தார்கள். பல குடும்பங்களுக்குப் பெரிய தலைவன் ஒருவன்இருந்தான். இவ்வாறு பண்டை மக்களிடையே ஆட்சி முறை உண்டாயிற்று. கோ என்னும் சொல்

மாட்டைக் குறிக்குமாதலால் அதனை யுடையவன் கோன் எனப்பட்டான். கோன் என்னுஞ் சொல் அரசனையும் குறிக்கும். அதனால் ஆட்சி முறை இடையருள்ளேயே தொடங்கிற்றெனக் கருதப்படுகின்றது. கோன் ஆட்டுமந்தைகளை மேய்க்கும் கோலைக் கையிடத்தே வைத்திருந்தான். அக்கோலே ஆட்சியை உணர்த்தும் செங்கோலாக மாறிற்று.

இடையரின் குலதெய்வம் திருமால். ஆயர் பாற்பொங்கல் இட்டுத் திருமாலை வழிபட்டனர். மகளிர் கைகோத்துக் குரவை ஆடித் திருமாலின் புகழ் பாடினர். கண்ணபிரான் இடைக்குலத்தினன். பாரதப் போருக்குப்பின் முல்லை நிலத்தாரின் திருமால் வணக்கம் கண்ணன் வணக்கமாக மாறிற்று.

---

## 19. வேளாண் மக்கள்

ஆற்றோரங்களில் வாழ்ந்து தானியங்களை விளைவித்தோர் வேளாளர் எனப்பட்டனர். வேளாளர் என்பதற்கு நிலத்தை ஆள்பவர் என்பது பொருள். வேள் என்பது நிலத்தைக் குறிக்கும். வேளாளரைக் குறிக்க வெள்ளாளர் என்னும் சொல்லும் வழங்கும். இச்சொல்லில் வேள் என்பது வெள்ளம் என்பதன் மரூஉ. வெள்ளாளர் என்பதற்கு வெள்ளத்தை ஆள்பவர் என்பது பொருள். வயல் நிலங்களில் மருத மரங்கள் செழித்து வளர்ந்தன. ஆகவே வயலும் வயல் சார்ந்த இடங்களும் மருதநிலம் அல்லது மருதம் என்னும் பெயர் பெற்றன. வேளாண்மை செய்யும் ஒருவன் தனக்கு நீண்ட நாட்களுக்குப் போதுமான உணவைப் பெறக்கூடியவனாயிருந்தான். வேளாண்மக்கள் பயிரிட்டுக் கூலங்களை அறுக்குங் காலங்கள்போக மற்ற காலங்களில் ஓய்ந்திருந்தனர். இந்த நல்ல நிலைமையில்தான் மக்கள் ஓரிடத்தில் தங்கியிருந்து தம் அறிவைப் பெருக்க நினைத்துப் பல்வகை நற்கலைகளை வளர்த்தனர். மனிதனுக்குப் போதுமான உணவும் உடையும் கிடைப்பின் அவன் உள்ளக்களிப்பாக வாழவும், பொழுது போக்கவும் விரும்புகிறான். தனக்கு அவ்வகைப் பொழுதுபோக்கும் முறைகளைக் காண்பிப்பவர்களுக்கு அவன் தனது களஞ்சியத்தினின்றும் தானியங்களைக் கொடுக்கிறான். ஆதலின், பொழுது போக்குக்கும் அறிவு வளர்ச்சிக்கும் உரிய நற்கலைகளைப் பலர் பயின்றதனால் கலைகள் வளர்ச்சியடைந்தன.



கூலம் விளைவிக்கும் வேளாளர் செல்வராயிருந்தனர். அவர்களின் பெண்டுபிள்ளைகள் அணி

வதற்கு அழகிய பொன்அணிகள் வேண்டப்பட்டன. வீட்டிற் பயன்படுத்துதற்கு வேண்டிய நாற்காலி, முக்காலி, கட்டில், பெட்டி, ஏணி போன்ற பல பொருள்கள் தேவைப்பட்டன. பயிரிடுவதற்கு உதவியான கலப்பை, நுகம், கொழு, மண்வெட்டி, அரிவாள் போன்ற பல பொருள்களும் தேவையாயிருந்தன. இவைகளை எல்லாம் செய்து அளிக்கும் தொழிலாளர் வந்து வேளாண்மக்கள் வாழ்ந்த இடங்களைச் சுற்றிக் குடியிருந்தார்கள். அவர்கள் தாம் வேளாளனுக்குச் செய்து உதவும் பொருள்களுக்கு விலையாகக் கூலங்களைப் பெற்றனர்.

வேளாளர் வேந்தன் என்னும் கடவுளைத் தமது குலதெய்வமாகக் கொண்டு வழிபட்டனர். வேந்தன் என்பதற்கு அரசன் எனவும் பொருள் உண்டு. கடவுள் உலகுக்கு அரசன் எனவும், அரசன் அக்கடவுளுக்கு ஏற்ப மக்களைக் காக்கும் உரிமையாளன் எனவும் முற்கால மக்கள் நம்பினார்கள். இந் நம்பிக்கை தமிழர்களிடையே மட்டுமன்று; பழையமக்கள் எல்லாரிடையும் காணப்பட்டது.

வேளாண்மக்கள் கொலையும் புலையும் நீக்கித் தூயவாழ்க்கை நடத்தினர். மக்கள் கடவுளை வழிபடும்பொருட்டு அவர்கள் ஊர்கள்தோறும்பெரிய



கோவில்களைக் கட்டினார்கள்; பிறர் நலங் கருதிப் பல்வேறு அறங்களைப் புரிந்தார்கள். வேளாளர் விருந்தினரை அகமலர்ந்து வரவேற்றனர். கம்பரும், திருவள்ளுவரும் வேளாண் மக்களின் சிறப்பை வேண்டிய அளவு விளக்கிக் கூறியுள்ளார்கள். வேளாண்மக்கள் உலகுக்கு அச்சாணி போன்றோர். அவர்களே உலகில் சிறந்த வள்ளல்களாக விளங்கினார்கள்.

---

## 20. கடற்கரை மக்கள்

கடற்கரைகளில் நெய்தல் என்னும்ஒருவகை நீர்ச்செடி பெரிதும் வளர்ந்திருக்கும். அக்காரணத்தால்கடலும் கடல்சார்ந்த இடங்களும் நெய்தல் என்னும் பெயர்பெற்றன. நெய்தல் நிலத்தே, புன்னை, பனை, தெங்கு முதலியன செழித்து வளர்ந்தன. அவ்விடங்களில் வாழுநர் பரதவர் எனப்பட்டனர்.

பரதவர் கட்டுமரங்களிற் கடலிடத்தே சென்று மீன் பிடித்தனர். அவர்கள் மீனைத் தமது முதன்மை உணவாகக் கொண்டனர். பரதவர் கொண்டுவந்த மீனைப் பரத்தியர் மற்றைய இடங்களுக்குக் கொண்டு சென்று விற்றனர்; மீனின் விலையாகக் கூலங்களையும் தமக்கு வேண்டும் பிற

பண்டங்களையும் பெற்றனர். கடற்கரைகளில் உப்பு விளைக்கும் பாத்திகள் உண்டு. அவர்கள் கடல் நீரை அப்பாத்திகளிற் பாய்ச்சி உப்பு விளைவித்தனர். உப்புவணிகர்கள் உமணர் எனப்பட்டனர். உமணர் உப்பை வண்டிகளின் மேலும் கழுதைகளின் மீதும் ஏற்றிச்சென்று மற்றைய இடங்களில் விலைப்படுத்தினர்.

கட்டுமரத்துக்குத் திமில் என்பது மற்றொரு பெயர். திமில்களிலே கடலிற் சென்றோர் திமிலர் எனவும் பட்டனர். திமில்களிலே சென்று மீன் பிடித்த பரதவர் நாளடைவில் பெரிய மரக்கலங்களில் கடல் கடந்து அயல்நாடுகளுக்குச் சென்றனர். அவர்கள் அந்நாடுகளிலுள்ள அரிய பண்டங்களை இந்நாட்டுக்குக் கொண்டுவந்தனர் ; இந்நாட்டுப் பண்டங்களை அந்நாடுகளுக்குக்கொண்டு சென்றனர். நாளடைவில் பிறநாட்டு மரக்கலங்கள் தமிழ்நாட்டுக் கடற்கரைகளுக்குவரத்தொடங்கின. இவ்வாறு கடற்கரைகளில் வாணிகம் தொடங்கிற்று. உள்நாட்டுப் பண்டங்கள் வண்டிகளிலும், கழுதைகளிலும், பொதிமாடுகளிலும் கடற்கரைகளுக்குக் கொண்டுவரப்பட்டன. கடற்கரைகளில் வந்திறங்கிய பிறநாட்டுப் பண்டங்கள் உள்நாடுகளுக்குக் கொண்டு செல்லப்பட்டன. உள்நாடுகளிலிருந்து கடற்கரைத்துறைமுகங்கள்



வரையில் வண்டிகளும் மக்களும் செல்லக்கூடிய தெருக்கள் அமைக்கப்பட்டன. இவ்வாறு கடற்கரைகளில் பட்டினங்கள் உண்டாயின. அவ்விடங்களில் வணிகரும் மரக்கலங்கள் வைத்திருப்போரும் பெரிய மாளிகைகள் அமைத்து அவைகளில் வாழ்ந்தனர். ஏற்றுமதியாகும் பண்டங்களுக்கும் இறக்குமதியாகும் பண்டங்களுக்கும் தீர்வை பெறும்பொருட்டு அரசினரால் பண்டசாலைகள் அவ்விடங்களில் அமைக்கப்பட்டன. பல்வேறு நாடுகளிலிருந்தும் மக்கள் வாணிகத்தின் பொருட்டுத் துறைமுகப் பட்டினங்களுக்கு வந்தார்கள். தொழில்செய்து பிழைக்கும்பொருட்டு அவ்விடங்களுக்கு உள்நாடுகளினின்றும் மக்கள் சென்று தங்கினார்கள். பட்டினங்கள் மக்கள் நெருங்கி நடமாடும் இடங்களாயின. மக்கள் நெருங்கிவாழும் இடங்களில் பொழுதுபோக்குக்கேற்ற பலவகைக் களியாட்டங்கள் நடைபெற்றன. இராக்காலங்களில் மரக்கலங்கள் திசை அறிந்து துறைபிடிக்கும்பொருட்டுத் துறைமுகங்களில் வெளிச்சவீடுகள் அமைக்கப்பட்டிருந்தன. அவை கலங்கரை விளக்கங்கள் எனப்பட்டன.

தமிழ்நாட்டில் காவிரி ஆற்று முகத்துவாரத்திலிருந்த புகார் என்னும் நகர் பெரிய துறைமுகப்பட்டினமாயிருந்தது. அங்குப் பல மொழிகளைப்பேசும் பிறநாட்டுமக்கள் தங்கி வாழ்ந்தனர்.

பட்டினங்களல்லாத மற்றைய கடற்கரைப் பக்கங்களில் பரதவர் மீன்பிடிக்கும் தொழிலையே பெரிதும் கைக்கொண்டிருந்தனர். அவர்கள் பனந்தோப்புக்களில் சிறு சிறு குடிசைகள் கட்டி வாழ்ந்தனர்; மீன் இருல் முதலியவைகளை வெயிலில் உலர்த்தினர். பரதவர் சிறுமியர் புன்னை நிழலில் இருந்து மீனைக் கவரவரும் புட்களை ஓட்டினர். பரதவர் பனை தென்னை முதலியவைகளினின்றும் எடுக்கப்படும் கள்ளை உண்டு மகிழ்ந்தனர்.

பரதவரின் குல தெய்வம் வருணன். அவர்கள் சுருக்கொம்பை நட்டு, மாலைகள் சூட்டி, ஆடல் புரிந்து அக்கடவுளை வழிபட்டனர். தமிழர் கடவுளாகிய வருணனை ஆரிய மக்களும் வழிபட்டனர். வருணன் என்னும் கடவுளை வழுத்திப் பாடிய பாடல்கள்பல அவர்கள் வேதங்களிற் காணப்படுகின்றன.

---

## 21. பாலைநில மக்கள்

மணல்வெளிகள் பாலைநிலம் எனப்பட்டன. அவைகளின் இடை இடையே புல் பூண்டுகளும் மரஞ்செடிகளும் காணப்பட்டன. வெயிலின் வெம்மையால் கரிந்துபோகாத பாலை என்னும்



மரங்கள் அவ்விடங்களில் பெரிதும் வளர்ந்தன. ஆகவே மணல் வெளிகளும் அவைகளைச் சார்ந்த இடங்களும் பாலை என்னும் பெயர் பெற்றன பாலைநிலம் மிக வெப்பமுடையது.

அங்கு வாழ்ந்த மக்கள் புளிஞர், வேடர், எயினர், மறவர் எனப்பட்டனர். அவர்கள் குன்றுகளில் வாழ்ந்த குறவரிலும் பார்க்க நாகரிகத்தில் கீழ்நிலையினர். அவர்கள் கூலங்களைப் பயிரிடவும் ஆடுமாடுகளை வளர்த்து அவை தரும் பயன்களைப் பெறவும் அறிந்திருக்கவில்லை; வேட்டை ஆடுதலாற் கிடைக்கும் விலங்குகள் பறவைகளின் ஊனையே அவர்கள் பெரிதும் உண்டு வாழ்ந்தனர்.

அவர்கள் வழிபறிப்போரும், கொள்ளையிடுவோருமா யிருந்தனர். சில சமயங்களில் அவர்கள் அயல் இடங்களிற் சென்று ஆடுமாடுகளைக் கொள்ளையிடுவர். வணிகர் பண்டங்களைக் கழுதைகள்மீது ஏற்றிக்கொண்டு மணல் வெளிகளைக் கடந்து செல்வார்கள். வேடர் அவர்களைக் கொன்று பண்டங்களைக் கொள்ளையிடுவர். ஆனமையின் அவர்கள் முற்காலங்களில் மணல்வெளிகளைக் கடந்துசெல்ல நேர்ந்தால் கூட்டங்களாக ஆயுதங்கள் தாங்கிச்செல்வது வழக்கம். அக்கால வணிகர் சிறந்த போர்வீரர்களாயும் இருந்தனர்.

எயினர் சிறு குடிசைகள் கட்டி வாழ்ந்தனர். அவை ஈந்தின் ஓலையால் வேயப்பட்டிருந்தன. அவைகளின் மேற்புறம் முள்ளம்பன்றியின் முதுகுபோல் தோன்றின. வேடப்பெண்கள் பாரையினால் எறும்புப்புற்றுகளைக் கிண்டி எறும்புகள் சேர்த்து வைத்திருக்கும் புல் அரிசியைச் சேர்த்தார்கள்; அதனை முற்றத்தே கிடக்கும் நில உரலில் இட்டி ஆக்கி, வேட்டைநாய் பிடித்துக் கொண்டுவந்த உடும்பின் இறைச்சியோடு தேக்கிலையில் இட்டு உண்டனர். அவர்கள் மான் தோலில் படுத்து உறங்கினார்கள்; சங்குமணி, சோகி, என்பு முதலியவைகளை நகைகளாக அணிந்தனர்.

பாலைநில மக்கள் காளியைத் தமது குல தெய்வமாகக்கொண்டு வழிபட்டனர். காளிக்கு ஊர்தி சிங்கம். வேடர் காளிக்கு உயிர்ப்பலி இட்டு வழிபட்டனர். மக்கள் வேடன் இடையன் உழவன் என்ற மூவரின் வாழ்க்கை நிலைகளை ஒன்றின்பின் ஒன்றாக முறையே அடைந்தார்கள். அவைகளில் வேடரின் வாழ்க்கைமுறை முதல் நிலையினது. இந்நிலையில் மக்கள் உணவு ஒன்றுக்காக மாத்திரம் முயன்றுகொண்டிருந்தார்கள். ஆகவே அவர்கள் ஓர் இடத்தில் தங்கி ஆறியிருந்து நாகரிகம் பெற முடியவில்லை.

---

# 22. தமிழ்

தமிழ் ஒரு காலத்தில் இவ்வுலகம் முழுவதிலும் வழங்கிற்று. இவ்வாறு கூறுதல் வியப்பாயிராது. ஏன்? ஆதியிற்றோன்றிப் பெருகிய மக்கள் தமிழரே என்று முன் பாடங்களிற் படித்தோம். கூட்டங் கூட்டமாகச் சென்று ஆங்காங்குத் தனித்து வாழ்ந்த மக்கள் பேசிய தமிழ் சிறிது சிறிதாக வேறுபட்டது. அவ்வாறு வேறுபட்ட மொழி நெடுநாட்களின்பின் வெவ்வேறு மொழிகள் ஆயின.

ஆதியில் மொழி எப்படி உண்டாயிற்று? தொடக்கத்தில் மக்கள் தமது எண்ணங்களை வெளியிடச் சில ஒலிக்குறிகளை வழங்கினர். காலஞ் செல்லச் செல்ல இவ்வொலிக் குறிகள் சிறிது சிறிதாகப்பெருகி மொழி ஆயின. பேச்சு வழக்கிலுள்ள மொழிக்குப் பின்பு எழுத்துக்கள் உண்டாயின. பின்பு இலக்கியங்கள் உண்டாயின. இவைகளுக்குப்பின் இலக்கணங்கள் தோன்றின. இவ்வாறு மொழிதோன்றிப் படிப்படியே வளர்ச்சியடைந்தது.

கடவுள் தமிழையும் சமக்கிருதத்தையும் அருளிச்செய்தார் எனப்பலர் நம்பிவருகின்றனர். இக்கருத்து மொழி வளர்ச்சி நூலுக்கு மாறுபட்டது. இம்மொழிகளின் உயர்வை மக்கள் ஏற்றுக்

கொள்ளும்பொருட்டு முற்கால மக்கள் இவ்வகைக் கதைகளை எழுதிவைத்தார்கள்.

ஆறுயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழுக்கு எழுத்துக்கள் இருந்தன. அவ்வெழுத்துக்களின் திரிபே இக்காலத்து மக்கள் எல்லோருடைய எழுத்துக்களும் ஆகும். ஆதியில் தோன்றியது ஓவிய எழுத்து. ஓவிய எழுத்து என்ருல், கால், கை, நடத்தல், இருத்தல், படுத்தல் போன்றவைகளை விளக்க அவ்வவ் வுறுப்புக்களையும் அவ்வகைச் செயல்களையும் படத்தின்மூலம் வரைந்து காட்டுதல்.

பட எழுத்துக்கள் விரைந்து எழுதிய விடத்துக் கீறுகளாக அமைந்தன. பின்பு ஒவ்வொரு சொல்லின் ஒலிப்பையுங் குறிக்க ஒவ்வொரு குறி கண்டுபிடிக்கப்பட்டது. இதற்குப்பின் மொழியிலுள்ள ஓசைகள் எத்தனை என்று ஒலித்துப் பார்த்து ஒவ்வொரு ஓசைக்கும் ஒவ்வோர்எழுத்து உண்டாக்கப் பட்டது. மொகஞ்சொதரோவில் வழங்கிய தமிழ் எழுத்துக்கள் சில மாற்றம் அடைந்து பிராமி எழுத்துக்கள் ஆயின. இவ்வெழுத்துக்களைப் பினீசிய மக்கள் வழங்கினர். பினீசியரிடமிருந்து கிரேக்கர் எழுத்தெழுத அறிந்தனர். கிரேக்கரிடமிருந்து உரோமரும், உரோமரிடமிருந்து மற்றைய ஐரோப்பிய மக்களும், எழுத்தெழுத அறிந்தனர். இன்று ஆங்






தமிழகம் (மூவேந்தர் நாடுகள்)

கில மொழியில் வழங்கும் எழுத்துக்களும் பழந்தமிழ் எழுத்துக்களினின்றும் பிறந்தனவே.

தமிழில் பல அரிய நூல்கள் முற்காலங்களில் இருந்தன. அவை ஏடுகளில் எழுத்தாணியால் எழுதப்பட்டன. அப்போது ஒவ்வொரு நூலிலும் ஒன்று அல்லது சில படிகளே இருந்தன. ஓலைச்சுவடிகள் சில காலத்திற்குப்பின் பூச்சிகளால் துளைக்கப்பட்டும், ஒடிந்தும் இறந்துவிடும். இக்காரணத்தினுல் தமிழ் நூல்கள் பல இறந்தன. தமிழ் நாட்டைப் பலமுறைகளிற் கடல் கொண்டது. கடல்கோள் போன்ற இக்கட்

டுக் காலங்களில் மக்கள் தமது பொருள் பண்டங்களை எல்லாம் போட்டுவிட்டு உயிர் பிழைப்பதற்காக ஓடியிருப்பார்கள். இக்காரணத்தினாலும் பழைய நூல்கள் இறந்தொழிந்தன. ஆகையினாலேயே தமிழ் மொழியில் எழுதப்பட்ட மிகப் பழைய நூல்கள் கிடைக்கவில்லை.

---

## 23. தமிழ்ச் சங்கம்

தமிழ் நாட்டு மூவேந்தரும் தமிழைக் கருத்தோடு வளர்த்தார்கள். அவ்வேந்தரின் அரண்மனைகளில் தமிழ்ப் புலவர்கள் இருந்தார்கள். அவர்கள் அரசனது வெற்றிகளையும் பிற புகழ்களையும் அழகிய இனிய பாடல்களாகப் பாடினார்கள். அப் பாடல்கள் அரண்மனை விழாக் காலங்களில் அரசனதும் பெருமக்களுடையவும் முன்னிலையிற் படிக்கப்பட்டன. புலவர்கள் அரிய கல்விப் பொருள்களை விரிவுரை நிகழ்த்துவதற்கெனத் தனி மண்டபங்கள் பல நகரில் இருந்தன. அவை பட்டி மண்டபங்கள் எனப்பட்டன. அரசர் சபைகளில் தமிழ்ப்புலவர்கள் பெரிதும் வரவேற்கப்பட்டனர். அரசன் அவரவர்களின் வரிசைகளை அறிந்து அவரவர்களுக்கு வேண்டுவன நல்கினான்.

பாண்டிய அரசன் ஒருவன், தமிழ் நாட்டில் ஆங்காங்கு வாழ்ந்த தமிழ்ப் பெரும்புலவர்களைத்



தனது தலைநகருக்கு அழைத்தான். அவன் தனது ஆதரவின்கீழ் தமிழ்க் கழக மொன்றை



இற்றைக்கு 2200 ஆண்டுகளின் முன் இலங்கைத் தீவை ஆண்ட தமிழ் அரசன் ஒருவனின் வடிவம். (வாலகம்வாகு அரசனின் உருவம் அவன்காலத்தில் மரத்தில் வெட்டப்பட்டுத் தம்பளை மலைக்கோயிலுள் வைக்கப்பட்டுள்ளது.)

நிறுவினான்; அக்கழகம் பல பாண்டிய அரசர்கள் காலம் வரையில் நன்கு நடைபெற்றது. சங்கப் புலவர் கூடியிருந்து தமிழ் ஆய்வதற்கெனத் தனி மண்டபம் இருந்தது. அதனகத்தே கன்மாப் பலகையினால் செய்யப்பட்ட பீடங்கள் இடப்பட்டிருந்தன. இப்பீடங்களில் சங்க உறுப்பினர்களாகிய புலவர்களே வீற்றிருந்தார்கள். புதிதாகப் புலமையில் அரங்கேறிய புலவர்களுக்கும் அவ்

விருக்கை இடப்பட்டது. இது, பிற்காலத்தே சங்கப் பலகை விரிந்து புலவர்களுக்கு இடங் கொடுக்கும் கதையாக மாறிற்று.

புதிய நூல்களை இயற்றுவோர் தமது நூல்களுடன் பாண்டியனது தலைநகருக்குச் சென்றார்கள். அங்கே அவர்கள் தமது நூல்களைச் சங்கப் புலவர் முன்னிலையிற் படித்துக்காட்டினர். சங்கப் புலவர்களால் குற்றமற்றன என்று ஏற்றுக் கொள்ளப்பட்ட நூல்களைச் செய்தோர் சிறந்த புலவர்களாக மதிக்கப்பட்டனர். முற்காலத்தில் கல்வி அறிவாற் சிறந்தவன் என மக்களால் மதிக்கப்படுதலே எல்லாப் புகழ்களிலும் மேலானதாகக் கருதப்பட்டது. "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோன் எனக்கேட்ட தாய்" என்னும் திருக்குறளும் இதனையே குறிக்கின்றது.

ஆதியில் சங்கம் பாண்டியரின் தலைநகராகிய தென்மதுரையிற் கூடிற்று. அது இப்பொழுதுள்ள மதுரையன்று. அது கன்னியா குமரிக்குத் தெற்கேயிருந்து கடலாற்கொள்ளப்பட்டது. கடல் கோளுக்குப்பின் பாண்டியர் தமது தலைநகரைக் கவாடபுரத்துக்கு மாற்றினார்கள். அது திருநெல்வேலி மாகாணத்திலேதாமிர்வர்ணிஎன்னும் பொருநை ஆற்று முகத்துவாரத்தி லிருந்தது. அங்கு மறுபடியும் தமிழ்ச்சங்கம் கூட்டப்பட்டது. பின்பு கவாடபுரம் கடலாற்கொள்ளப்பட்டது. அப்பொழுது பாண்டியர் தமது தலைநகரை மணலூருக்கு மாற்றினர். அது திருச்செந்தூருக்குப் பக்கத்தில் இருந்தது. சிலகாலத்தின் பின்னர் பாண்டியர் தமது தலைநகரை வையை ஆற்றுக்கு அருகே இருந்த கூடம்பவனத்தில் அமைத்து அதற்கு மதுரை எனப் பெயரிட்டனர். மறுபடியும் தமிழ்ச் சங்கம் இங்குகூடி நீண்டகாலம் நடைபெற்றது. ஆதியில்தொடங்கிய சங்கம் தொடர்ந்து நடவாமல் இடையிடையே நின்று போயிற் றல்லவா ? அக்காரணத்தினல், 'முதல் நடைபெற்ற சங்கம் முதற் சங்கம் என்றும், அதற்குப்பின் நடைபெற்ற சங்கம் இடைச்சங்கம் என்றும், இறுதியில் நடைபெற்ற சங்கம் கடைச்சங்கம் என்றும் பெயர்பெற்றன.

---



## 24. நாடகத் தமிழ்

தமிழ், இயல் இசை நாடகம் என மூவகைப்படும். ஆதியில் நாடகத் தமிழும், பின் இசைத் தமிழும், அதன் பின் இயற்றமிழும் தோன்றின. இம்மூவகைத் தமிழும் மொழியின் இயற்கை வளர்ச்சிப்படிகளாகும்.

ஒருகாலத்து மக்கள் பேச அறியாதிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் தமது கருத்துக்களை உடல் நிலை, முகம், பார்வை என்பவை

களால் வெளியிட்டனர். சதிர் என்று சொல்லப்படும் நாட்டியம் ஒரு பாட்டின் கருத்தை நடித்துக் காட்டுதலாக அமைந்துள்ளது. முற்காலத்தில் சிவனாடல், வேலன் ஆடல், திருமால் ஆடல் எனப் பலவகை ஆடல்கள் வழங்கின. இவ்வாடல்களும் சதிர் ஆட்டங்கள் போன்றனவே. நடிப்பு நாடகம், கூத்து, துள்ளல் என்னும் சொற்கள் ஒரு காலத்தில் ஒரு பொருளில் வழங்கின. பிற்காலத்தில் நாடகம் என்பது பலர் சேர்ந்து ஒரு கதையை நடித்துக் காட்டுவதை மாத்திரம் குறிக்க வழங்குவதாயிற்று.

ஒரு கருத்தை நடித்துக் காட்டும் ஆடலுக்குப்பின் கதையை நடித்துக் காட்டும் நாடகம் தோன்றிற்று. தமிழரிடையே நாடகத் தமிழ் மிகப் பழைய காலத்திலேயே தோன்றி வளர்ச்சியடைந்திருந்தது. தமிழருடைய கடவுள் நடராசன் எனப்படுகின்றார். நடராசன் என்பதற்கு நடன சபைக்குத் தலைவன் என்பது பொருள். பொழுது போக்குக் கலையாகத் தொடங்கிய நாட்டியக் கலை கடவுட் புனிதமுடையதாகத் தமிழராற் கொள்ளப்பட்டு ஒருகாற் போற்றப்பட்டது.

நாடகத் தமிழுக்கு உயிர், மெய்ப்பாடு. மெய்ப்பாடு என்பது உள்ளத்தே தோன்றும் உணர்ச்சி மெய்யிடத்திற் றோன்றுதல்.



நாடகம் நடிக்கும் மேடை அரங்கு எனப்பட்டது. நாடகத் தமிழ் வளர்ச்சியடைந்த காலத்தில் நாடகத் தமிழ் இலக்கணங்கள் பல எழுதப்பட்டன. அவ்வகை இலக்கணங்கள் இன்று தமிழ்மொழியிற் காணப்படவில்லை.

இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளின் முன் சிலப்பதிகாரம் என்னும் சிறந்த




சங்க காலத் தமிழகம்

தமிழ் நூல் ஒன்று இளங்கோவடிகள் என்னும் சேர இளவரசனால் எழுதப்பட்டது.

அந்நூலில் அரங்கேற்று காதை என்னும் ஒரு பகுதி உள்ளது. அதனகத்தே பழைய நாடகத் தமிழ் வழக்குகள் பல காணப்படுகின்றன. சிலப்பதிகாரத்துக்கு அடியார்க்குநல்லார் என்னும் புலவர் ஒருவர் உரை எழுதியுள்ளார். அவர், பழைய நாடகத் தமிழ் நூல்கள் பலவற்றிலிருந்து தமது உரைக்கு மேற்கோள் காட்டியிருக்கின்றார். அதனால் முற்காலத்து நாடக இலக்கணங் கூறும் தமிழ் நூல்கள் பல இருந்தனவென்று நாம் நன்கு அறிகின்றோம்.

சிறுமியர், குரவை கும்மி கோலாட்டம் எனப் பல ஆடல்கள் புரிந்தனர். அரசர் முன்பும், பெருமக்கள் முன்பும், ஆடி அவர்களை மகிழ்விக்கும் கூத்தர் கூத்தியர் பலர் இருந்தனர்.

நாடக அரங்கு வட்டமாக இருந்தது. அதன்மீது இடப்பட்ட கொட்டில் வட்டவடிவினது. பலவகை ஓவியங்கள் எழுதிய ஆடைகள் மேற்கட்டியாகக் கட்டப்பட்டிருந்தன. அரங்கில் திரைச் சீலைகள் பயன்படுத்தப்பட்டன.

பலர் முன்னிலையில் ஆடுதல் பாடுதல் முதலியன குலமகளிர்க்கு ஏற்ற செயலாக முற்காலத்துக் கொள்ளப்படவில்லை. ஆனால் குல மகளிரும் ஆடல் பாடல்களை நன்கு அறிந்திருந்தனர். அரங்கு ஏறி நடிப்போர் கணிகையர் குலத்தினராகவே யிருந்தனர்.

---

# 25. இசைத் தமிழ்

மனிதனுடைய உள்ளத்தெழும் உணர்ச்சிகளுக்கேற்றவாறு எழும் மெய்ப்பாட்டிலிருந்து நாடகம் வளர்ச்சி யுற்றதென்று முன்பாடத்திற் படித்தோம். உணர்ச்சிகளுக் கேற்ப மனிதன் தோற்றுவிக்கும் ஓசைகளிலிருந்து இசை வளர்ச்சியுற்றது. வீரம், மகிழ்ச்சி, அழுகை போன்றவைகளை உணர்த்தப் பாடப்படும் பாடல்கள் வெவ்வேறு ஓசைகளிற் பாடப்படுதலை நாம் காண்கின்றோம். இசையினால் மனிதனின் உள்ளத்தில் எவ்வகை உணர்ச்சியையும் எழுப்பலாம் எனக் கருதப்பட்டது. ஆகவே கால இடங்களுக்கேற்ற இசைகள் பாடப்பட்டன. தமிழர் மிகப் பழைய காலத்திலேயே மிக்க இசைப் பயிற்சி யுடையவர்களாயிருந்தார்கள். குழந்தைகளைத் தாலாட்டுதல் முதல் எல்லாவற்றுக்கும் இசை பயன்படுத்தப் பட்டது. இறந்தவர்களைக் குறித்து அழும் அழுகைதானும் இசையுடையதாகும். ஆடவரும் மகளிரும் இசையைப்பற்றி நன்கு அறிந்திருந்தார்கள். அரசர் அவைகளில் பாடி அவர்களை மகிழ்விக்கும் பாடன்மகளிர் பலர் இருந்தனர். கதைகள் நாடக முறையில் நடிக்கப்பட்டன. அவைகளுக்கு இசை வேண்டப்பட்டது.

தமிழ் நாட்டில் வழங்கிய இசைக்கருவி களுட் சில யாழ், வீணை, குழல், மத்தளம்,



முற்கால வீணை

கொம்பு, சங்கு, தாளம் முதலியன. அவை தோற்கருவி, துளைக் கருவி, நரம்புக்கருவி என நால்வகையாக வழங்கின. வாய்ப்பாட்டு மிடற் றுப்பாட்டு எனப்பட்டது. தமிழில் வழங்கிய



கின்னரம், (ஒரு வகை வீணை) இது "வயலின்" என்னும் கருவிக்கு நேரானது. இந்திய மக்களே ஆதியில் வில்லால் இயக்கப்படும் வீணையைக் கண்டு பிடித்தார்கள்.

ஆதியிசைகள் ஏழு. அவை குரல், துத்தம், கைக் கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன.



பண்டை நாளில் பாணர் என்னும் ஒரு வகுப் பினர் இருந்தனர். அவர்கள் இசை பாடுவதில் மிகத் தேர்ச்சி யுடைய வர். அவர்கள் ஊர் ஊராகச்சென்று அரச ரையும் செல்வரையும் பாடினார்கள். அவர்க ளின் இசைப் பாடல்க ளுக்கு உவந்து அன் னோர் அவர்களுக்குப் பொருள் வழங்கினர். பெரிய புராணத்திலும் நாலாயிரப் பிரபந்தத்தி லும் காணப்படும் திரு நீலகண்ட யாழ்ப்பாண ரும் திருப்பாணாழ்வா ரும் பாணர் மரபினரே யாவர் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த ஒரு பெண்மணி யாரே சைவத் திருமுறைகளுக்குப் பண் வகுத் தார்.



பழைய காலத்து யாழ்

இசைத்தொடர்பாக மூன்று பொருள்கள் கருத்திற் கொள்ளத்தக்கன. பாடல்கள் எளிதில் பொருள் விளங்கத்தக்கனவா யிருத்தல் ஒன்று.

பாடல்களில் இனிய சொற்களும் மேலான கருத்தும் அமைந்திருத்தல் மற்றொன்று. பாட்டுகள் பொருளுக்கேற்ற இசையிற் பாடப்படுதல் இன்னொன்று ஆகும். பொருள் விளங்கமுடியாத பாடலில் நுகர்வதற்குரியது மூன்றில் ஒரு பகுதியே யாகும்.

தமிழ் நாட்டில் தெலுங்கு கன்னட இந்திப் பாடல்கள் பெரிதும் இசைப்புலவர்களால் பாடப்பட்டு வந்தன. அவைகளின் குறையைத் தமிழ் மக்கள் அறியலானார்கள். தமிழ்மக்கள் இசையைக்கேட்டு நுகர்வதற்குத் தமிழ்ப் பாடல்களே வேண்டும் என்னும் கிளர்ச்சி எழுந்தது. இதனை எதிர்த்து வழக்காடிய ஒரு சார்பும் உண்டு. இப்பொழுது தமிழ்இசை உணர்ச்சி நாடெங்கும் கமழ்கின்றது.

---

## 26. இயற்றமிழ்

உள்ளத்து எழும் உணர்ச்சிகளுக்கேற்ற ஓசைகளிற் பாடப்படும் இசைப்பாடல்களையன்றி, வரலாறு, கதை, இலக்கணம் முதலிய பிற பொருள்களை விளக்கும் நூல்களும் செய்யுள் நடையில் எழுதப்படலாயின. அவ்வகை நூல்கள் இயற்றமிழ் என்னும் தலைப்பில் அடங்கும். தமிழ் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே



எழுத்து நிலை அடைந்திருந்தது. ஆகவே அதன்கண் பல இயற்றமிழ் நூல்கள் தோன்றியிருந்தன எனக் கொள்ளலாம். இன்று காணப்படும் இயற்றமிழ் நூல்களுள் மிகப் பழமையுடையது தொல்காப்பியம். இது இடைச்சங்க காலத்துச் செய்யப்பட்டதென நம்பப்பட்டு வருகின்றது. தொல்காப்பிய காலத்துக்கு முன் பல இலக்கண நூல்கள் இருந்தனவென்பது தொல்காப்பியச் சூத்திரங்கள் பலவற்றால் அறியக்கிடக்கின்றது. முன் மிக விரிந்து கிடந்த இலக்கண நூற் கருத்துக்கள் தொல்காப்பியர்காலம் முதல் சுருக்கி எழுதப்படலாயின. இதனால் தமிழ் மிக உச்ச நிலை அடைந்திருந்த காலம் தொல்காப்பியத்துக்கு முன்னர் என்று நன்கு தெளிவுறுகின்றது. தொல்காப்பியத்தில் தமிழ் தொன்மொழி என வழங்கப்பட்டுள்ளது.

இன்று தமிழிற்கிடைக்கும் இயற்றமிழ் நூல்களிற் பழையபன எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், சிந்தாமணி, மணிமேகலை, நீலகேசி முதலியன. இராமாயணம் பாரதம், தலபுராணங்கள், நிகண்டு நூல்கள் முதலியன பிற்காலத்தெழுந்த இயற்றமிழ் நூல்களுட் சில.

பழைய இயற்றமிழ் நூல்கள் வெண்பா, அகவல், கலிப்பா, வஞ்சிப்பா முதலிய பாடல்

களாற் பாடப்பட்டுள்ளன. அவைகளைப் பாடுதற்கேற்ற ஓசைகள் செப்பல், அகவல், துள்ளல், தூங்கல் முதலியனவாகும். விருத்தப்பாக்கள் பிற்காலத்துத் தோன்றியன. இன்று உரை நடையிற் றோன்றி மிளிரும் நூல்களையும் இயற்றமிழ் நூல்களில் அடக்கலாம். உரை நடையில் இயன்ற நூல்கள், மேடையில் ஏறிச் சொற்பொழிவாற்றுவோன் தான்கூறும் கருத்துகளுக்கேற்ப ஓசையை எடுத்தும் படுத்தும் நலிந்தும் பேசுவதுபோலப் பொருளுக் கேற்பப் படிக்கப் பட வேண்டியன. இயற்றமிழ் நூல்களிலும் இசைத்தமிழுக்குரிய சிறு பகுதிகள் காணப்படுதல் இயல்பு.

நாடகம், இசை, இயல் என்னும் இம்மூன்று வளர்ச்சிகளும் படிமுறையே தமிழ் மக்களிடையே தோன்றி இயற்கையாக வளர்ச்சியுற்றமையினாலேயே இயல் இசை நாடகம் என்னும் வழக்குத் தமிழ்மொழியில் மாத்திரம் காணப்படுகின்றது. பிறமொழிகளிலும் இயல் இசை நாடகம் என்னும் மூன்றும் காணப்படுகின்றனவாயினும் அவைகளை மொழியோடு தொடர்பு படுத்தி, "இயல் இசை நாடகச் சேர்மனியம்," "இயலிசை நாடக ஆங்கிலம்" என வழங்கப்படாமை அறிக.

## 27. சமயம் உண்டானவகை

ஆதிகாலந் தொட்டு மக்கள் சாவுக்கு மிக அஞ்சினார்கள். இறந்தபின் உயிர்கள் இவ்வுலகத்திலோ வேறு உலகத்திலோ ஆவிகளாக உறைகின்றன என்று அவர்கள் எண்ணினார்கள். ஆகவே இறந்தவர்களை அடக்கஞ் செய்யும் போது அவர்களின் பக்கத்தில் உணவும் அவர்கள் பயன்படுத்திய பொருள்களும் வைக்கப்பட்டன. இறந்தவர்களின் ஆவிகள் மக்களுக்கு நன்மைகளையும் தீமைகளையும் செய்யவல்லன என்னும் நம்பிக்கை மக்களிடையே இருந்தது. ஆகவே அவர்கள் இறந்தவர்களின் ஆவிகளை மகிழ்விக்கும் பொருட்டு அவைகளுக்கு மடைகளும் பலிகளும் இட்டு வழிபட்டார்கள். இவ்வழிபாடு தென்புலத்தார் வழிபாடு எனப்படும். இதன் வளர்ச்சியே சிறு தெய்வ வழிபாடாக மாறியுள்ளது. இன்றைய மக்கள் பெரும்பாலோரின் சமயம் இதுவே யாகும். பின்பு மக்கள் ஒளியுடைய ஞாயிற்றை முழுமுதற் கடவுளாகக் கருதி வழிபட்டார்கள். பழைய மக்கள் எல்லோரும் கடவுளுக்கு இட்டு வழங்கிய எல்லாப்



"பெத்தெல்"
பழைய பலஸ்தினியரின் சிவலிங்கம்

பெயர்களும் ஒளியுடையவன் என்னும் பொருள் உடையனவா யிருக்கின்றன. மக்கள் தொடக்கத்தில் கடவுளை மலைமுகடுகளிற் கண்டு வழிபட்



பழைய அயர்லாந்து மக்கள் வழிபட்ட சிவலிங்கங்கள்.

டார்கள். பின்பு மலையின் வடிவைக் குறிக்கும் முக்கோணக் கற்கள் ஞாயிற்றின் குறியாக நட்டு வழிபடப்பட்டன. இக்கற்களே சிவலிங்கங்களாகும். சிவலிங்கங்கள் நிழல் மரங்களின் கீழ் வைத்து வழிபடப்பட்டன. அவைகளைச் சுற்றிக் கட்டிடம் எழுந்தது. அஃது அமைப்பில் அரசனின் அரண்மனையை ஒத்தது. அங்கு நடத்தப்படும் செய்கை ஓர் அரசனுக்கு அவன் ஏவலாளர் நாள் முழுவதும் செய்யும் தொண்டுகளை ஒப்பன.



மக்கள் நல்வினை தீவினைகளைப் பற்றிப் பகுத்தறிவுடையவர்களானார்கள். ஆகவே நல்லொழுக்க விதிகள் சமயத்துடன் சேர்க்கப்பட்டன. இதனை வலியுறுத்தும் பொருட்டுத் துறக்கம் நரகக் கொள்கைகளும் அவைகளைப்பற்றிய உலகுரைகளும் எழுந்தன. பின்பு படிப்படியே உயிர், உலகம், இறை என்பவைகளைப் பற்றிய மெய்யுணர்வு ஆராய்ச்சி உண்டாயிற்று.

---

## 29. கடவுட் கொள்கை

மிகப் பழைய காலத்திலேயே தமிழ் மக்கள், எல்லாம் வல்ல கடவுள் ஒருவர் உண்டு என அறிந்து அவரை வழிபட்டார்கள். நினைவுக்கு எட்டாதவர், எல்லாவற்றையும் இயக்குபவர் என்னும் பொருளில் அவர்கள் எல்லாம்வல்ல அம் முழுமுதற் பொருளுக்குக் கடவுள் இயவுள் என்னும் பெயர்களை இட்டு வழங்கினர். ஆறுயிரம் ஆண்டுகளின்முன் பொறிக்கப்பட்ட மொகஞ்



மொகஞ்சொதரோ மக்கள் வழிபட்ட பசுபதிக் கடவுள்.

சொதரோ முத்திரைகளில் கடவுள் என்னும் பெயர் காணப்படுகின்றது.

கடவுள் உயிர்களிடத்துத் தாயுந் தந்தையும் போன்று அருள் வழங்குபவர் என அவர்கள் நம்பினார்கள். ஆகவே அவர்கள் கடவுளை அம்மை வடிவிலும் அப்பர் வடிவிலும் வைத்து வழிபட்டார்கள். அம்மையும் அப்பரும் வேறு வேறு அல்லர் என்பதை விளக்கும் பொருட்டுப் பாதி ஆணும் பாதி பெண்ணுமாயுள்ள வடிவங்களையும் வைத்து அவர்கள் வழிபட்டார்கள்.

நல்வினை தீவினைகளின் விளைவாகிய ஊழ், மறு பிறப்பு, உயிர்களின் அழிவின்மை போன்ற உண்மைகள் அவர்களால் நன்கு அறியப்பட்டிருந்தன. உள்ளத்தை ஒருவழிப்படுத்தி இறைவனை நினைத்தலாகிய யோகத்தைப்பற்றி அவர்கள் நன்கு அறிந்திருந்தார்கள். மொகஞ்சொதரோ முத்திரைகளில் இறைவன் யோகத்தில் அமர்ந்திருக்கும் கோலமுடைய வடிவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இறைவன் பசுவின் (உயிர்களின்) பதி என்னும் கருத்தை விளக்க அவ்வடிவைச் சுற்றிப் பல விலங்குகள், மக்கள் முதலியவற்றின் வடிவங்களும் வெட்டப்பட்டுள்ளன. உள்ளத்தை ஒரு வழிப்படுத்தி இறைவனை நினைப்பதால் மனிதன் பெரிய ஆற்றல்களைப் பெறுகின்றான். அவ்வகை ஆற்றல் அடைந்தோர் சித்தர் எனப்பட்டார்கள்.



இவ்வகை ஆற்றல் பெற்றோர் உலக மக்களும், அரசனும் நல்வழிப்படுதல் வேண்டும் என்று கோவில்களில் சென்று கடவுளை வேண்டினார்கள். இவ்வாறு செய்யப்படும் பூசை பரார்த்த பூசை (பிறர்பொருட்டுச் செய்யப்படும் பூசை) எனப்படும் இதற்கு எடுத்துக் காட்டு,

“வாழ்க வந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீரவே”

என்னும் சம்பந்தர் தேவாரமாகும்.

கோவில்கள் நல்லார் வந்து கூடும் இடங்கள் ஆதலின் அவர் இணக்கத்தினால் மக்கள் நல்வழிப்படுவார்கள் என்னும் கருத்துப்பற்றியே ஔவைப் பிராட்டியாரும் கோயிலில்லாத வூரிற் குடியிருக்க வேண்டாம் என அருளிச்செய்தார்.

தமிழ் மக்களின் வழிபாட்டுக்குரிய கோவில்களில் “மலங்கெடுத்து மனங்கரைக்கும்” திருவாசகம், தேவாரம் முதலிய தமிழ்ப்பாடல்கள் பத்திச் சுவை ததும்பப் பாடப்படுதல் வேண்டும். தமிழ் மக்கள் பொருள் விளங்கமாட்டாத வட

மொழிச் சுலோகங்களைத் தமிழ்க்கடவுளர் முன்னிலையில் ஓதுதல் அறிவுடையார் செயலாகமாட்டாது. மக்கள் முன்னேற்றம் அடையவேண்டுமாயின் அவர்கள் தமது உயிர்நிலையாயுள்ள கோவில்களில் சீர்திருத்தஞ் செய்தல் வேண்டும்.

## 29. தமிழரின் வீரவாழ்க்கை

வீரம் என்பது மக்கள் எல்லோராலும் கொண்டாடப்படும் சிறந்த மன உணர்ச்சி. ஒரு சிறந்த கொள்கையின் பொருட்டுத், தமது உயிருக்கு நேரும் கேட்டைப் பொருட்படுத்தாது எதிர்த்துப் போராடுதலே வீரம் என ஒருவாறு கூறலாம். உயிர் துறக்க ஒருக்கமாயிருத்தலின் வீரம் என்பதும் துறவுபோன்ற அரிய உணர்ச்சியாகும்.

தமது நாட்டைப் பகைவரினின்றும் காத்தற்பொருட்டு ஒருவராற் காட்டப்படும் வீரம் மிக உயர்வுடையதாகக் கொள்ளப்பட்டது. முற்காலத்தில் வீரத்தாற் சிறந்தவன் ஒருவனே அரசன் ஆனான். அவனே படையை நடத்திச் சென்றான். அரசனுக்கு அடுத்தபடியில் படைத் தலைவன் முதன்மையுடையவனா யிருந்தான். வீரர்களுக்குப் பட்டங்கள் அரசனால் வழங்கப்பட்டன. இன்றும் அரசினரால் பெருமக்களுக்கு



அளிக்கப்படும் பட்டங்களிற் பல அவ்வீர பட்டங்களின் எதிர் ஒலிகளேயாகும்.

முற்கால ஆடவர் தாம் வீரர் என்னும் பெயர் பெறுதல் வேண்டுமென விரும்பினார்கள். வீரனை மக்களும் அரசனும் மதித்தனர். பெண்கள் யாதேனும் ஒரு வீரச் செயலைக் காட்டுகின்ற ஒரு வீரனையே மணக்க விரும்பினார்கள். இன்று பெண்கள் கழுத்தில் அணியும் தாலியும் வீரத்தை உணர்த்துவதே. முற்காலப் பெண்கள் தம் கணவர் புலியைக்கொன்று வீரத்தின் அறிகுறியாகக் கொண்டுவந்த அதன் பற்களைக் கயிற்றிற் கோத்துக் கழுத்தில் மாலையாக அணிந்தார்கள். இன்றும் பொன்னினாற் செய்யப்பட்டுத் திருமணக் காலத்தில் அணியப்படும் தாலி அவ்வழக்கத்தின் எதிரொலியேயாகும். ஆரிய மக்களே தமிழ்நாட்டுக்கு இவ்வழக்கத்தைக் கொண்டுவந்து புகுத்தினார்கள் என வரலாறு அறியாத சிலர் கூறுவர். ஆரியர்களிடத்தில் தாலிகட்டும் சடங்குகளோ வழக்கங்களோ ஒரு போதும் இருக்கவில்லை.

நாட்டின் பொருட்டு யாதேனும் ஒரு வீரச் செயலைக் காட்டி மடிந்து போகின்றவனே வானுலகம் புகுகின்றான் என்று மக்கள் நம்பினார்கள். போரில் இறவாது நோய்வாய்ப்பட்டு இறந்த அரசரை வாளாற் பிளந்து, பின்பு அடக்கஞ்

செய்தல் முற்கால மரபு என்பது தமிழ் இலக்கியங்களிற் காணப்படுகின்றது. அவ்வாறு செய்தல் அவர்கள் போரில் வாளால் வெட்டுண்டிறந்தார்கள் என்பதைக் குறிப்பதற்கேயாம். இதனால் போரிடத்து மடிதலை அக்காலமக்கள் எவ்வளவு உயர்வாகக் கருதினார்கள் என்பது நன்கு விளங்குகின்றது. போரிற் புறங் கொடுத்தலும் முதுகிற் காயம் படுதலும் இழிவுடையன என்று கருதப்பட்டன. முதுகிற் புண்பட்ட அரசர் பலர் நாணத்தினால் உண்ணாவிரதமிருந்து உயிர் துறந்தார்கள். முகத்திலும் மார்பிலும் பட்டு ஆறிய வாள், அம்புத் தழும்புகள் வீரபதக்கங்களிலும் (Medals) சிறந்த அணிகலன்களாக மதிக்கப்பட்டன. ஒவ்வொரு வீரனும் தனது நாட்டின் பொருட்டு உயிரைத் துரும்பென மதித்தான். போரிடத்தே வியக்கத் தகும் வீரச் செயலைக் காட்டி ஒருவன் இறந்தால் இறந்த இடத்தில் அவன் வீரச் செயல்களை எழுதிய கல் நடப்பட்டது.

ஆடவர் மட்டுமல்லர், பெண்டிரும் வீரம் செறிந்து விளங்கினார்கள். தங்கணவரும் புதல்வரும் போர்க்களத்தே சென்று வீரச் செயல்களைக் காட்டுவதை அவர்கள் விரும்பினார்கள் வியக்கத் தகும் வீரச்செயலைக் காட்டி அவர்கள் போர்க்களத்தே மாண்டனராயின் அதுகுறித்து



அவர்கள் கவன்று கண்ணீர் வடித்திலர்; அவர் போரிற் புறங்கொடுத்தோடி வந்தாராயினும், முதுகிற் புண்பட்டாராயினும் பெரிதும் வருந்தினார்கள். பழைய தமிழரின் வீரத்தை நினைக்கும் போது எமது உள்ளம் சுழலுகின்றது. இன்று அவ்வீரம் எங்கு ஒளித்தது!

---

## 30. வாணிகம்

ஓரிடத்தில் உள்ள பண்டங்களை இன்னோரிடத்திற் கொண்டு சென்று விற்றுப்பொருள் ஈட்டுதல் வாணிகம் எனப்படும். பல இடங்களிலுள்ள மக்கள் பண்டங்களை விற்கவும் வாங்கவும் கூடும் இடங்கள் அங்காடிகள் (சந்தைகள்) எனப்பட்டன. சந்தை என்பது சந்தி என்பதினின்றும் பிறந்தது. உள்நாட்டுச் சந்தைகளுக்குப் பண்டங்கள், கழுதை பொதி மாடு வண்டிகளிற் கொண்டுபோகப்பட்டன. இன்று நமது நாடுகளில் ஆங்காங்கே நடைபெறும் சந்தைகளுக்கும் முற்காலச் சந்தைகளுக்கும் அதிக வேறுபாடு இருக்கவில்லை.

தமிழ் மக்கள் மேற்கு ஆசிய நாடுகளோடு மிகப் பழங்காலந் தொட்டுக் கடல் வழியாகவும் தரைவழியாகவும் வாணிகம் நடத்தினர். சிந்துநதி முகத்துவாரத்திலிருந்து எகிப்திலுள்ள

மெம்பிஸ் நகர்வரையில் பாரசீகத்துக்கூடாகப் பெரிய தரைப்பாதை யிருந்தது.

இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளின் முன் எகிப்தியர் மரக்கலம் வழியாகத் தமிழ் நாட்டுக்கு வந்து மீண்ட வரலாறு அவர்களின் பட எழுத்துப் புத்தகங்களிற் காணப்படுகின்றது. அவர்கள் மொழியில் குரங்கு, யானைத் தந்தம் என்பவைகளைக் குறிக்க வழங்கிய பெயர்கள் தமிழ்ச் சொற்களின் திரிபுகள் என்று கருதப்படுகின்றன.

“திரைகடலோடியுந் திரவியந் தேடு” “தெண்ணீர்க்கடல் கடந்தும்” “நாவாய் கவிழ்ந்த



தென் இந்தியாவினின்றும் யாவாத் தீவுக்குச் சென்ற இந்திய மரக்கலம். (யாவாச் சிற்பத்திற் காணப்பட்டது)

நாய்கன் போல்” என்னும் தமிழ் வழக்குகளால் தமிழ் மக்கள் கடல் கடந்து தொலைவிலுள்ள



நாடுகளுக்குச் சென்று பொருளீட்டினார்கள் என நன்கு அறிகிறோம். சுமத்திரா, யாவா, இந்துச் சீனம் முதலிய நாடுகளில் வாணிகத்தின் பொருட்டு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் சென்று தங்கிய தமிழரே அந்நாடுகளில் அரசுகளைக் கோலி அவைகளை ஆண்டு வந்தனர். இன்றும் அந்நாடுகளில் தமிழர் நாகரிகத்தின் அடையாளங்கள் பல காணப்படுகின்றன.

கிறித்து பிறப்பதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் பலஸ்தின் நாட்டை ஆண்ட சலமன் என்னும் அரசன் தனது மாலுமிகளை



அசுர் பானிப்பால் என்னும் அசீரிய அரசன் (கி. மு. 850) நாட்டிய கற்றூணில் வெட்டப்பட்டுள்ள இந்திய யானையும் குரங்குகளும்.

அனுப்பித் தந்தம், மயில், குரங்கு, பொன், யானைத் தந்தம், அகிற்கட்டை முதலிய பல

பொருள்களைத் தமிழ் நாட்டினின்றும் பெற்றான். இப்பண்டங்களைக் குறிக்கப் பலஸ்தின் மக்கள் வழங்கிய தமிழ்ப் பெயர்கள் சிறு மாறுபாட்டுடன் எபிரேய மொழியிற் காணப்படுகின்றன.

கறுவா, இஞ்சி, திப்பலி, அரிசி முதலிய பொருள்களைக் குறிக்கக் கிரேக்க மொழியில் வழங்கிய பெயர்களும் தமிழ்ச் சொற்களின் திரிபுகள் என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தமிழ் மக்கள் எகிப்து, மேற்கு ஆசியா, சீனம் முதலிய நாடுகளுக்குச் சென்று வாணிகம் நடத்தியதற்கு ஆதாரங்கள் பல பிறமொழிகளில் எழுதப்பட்ட பழைய நூல்களிற் காணப்படுகின்றன.

தமிழர் 6000 ஆண்டுகளுக்கு முன்னரேயே நாணயங்களின் பயனை அறிந்திருந்தனர். இது பழைய சிந்துவெளிப் புதைபொருள் ஆராய்ச்சியால் நன்கு தெளிவுறுகின்றது.

---

## 31. ஓவியமும் சிற்பமும்

இயங்கும் பொருள்களையும் இயங்காப் பொருள்களையும் அவைகளின் இயற்கைத் தோற்றம் மாறுபடாது வரைதல் ஓவியம் எனப்படும்.



சிற்பம் என்பது அவ்வகைப் பொருள்களை, மண் கல் உலோகம் என்பவை போன்ற பருப்பொருள்களில் அமைத்தல். தமிழர் மட்டுமேயன்றி உலக மக்கள் எல்லோருமே இவ்வகைக் கலைகளில் சிறந்து விளங்கினார்கள் எனப் பழம்பொருள் ஆராய்ச்சியாற் றெளிவுறுகின்றது. இதற்குக் காரணங்கள் ஆதியில் மக்கள் ஓவிய எழுத்துகளைப் பயன் படுத்தினமையே யாகும்.

சிந்து நதிப் பள்ளத்தாக்கிலே கண்டுபிடிக்கப்பட்ட முத்திரைகளில் மரஞ், செடி, காண்டாமிருகம், யானை, மாடு முதலிய விலங்குகளும் பிறவுமாகிய அழகிய வடிவங்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. அவை தமிழ் மக்கள் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன் அடைந்திருந்த ஓவிய, சிற்பக் கலைகளின் அறிவை உணர்த்துவன வாகும்.

தமிழ் மக்கள் அணிந்துகொண்ட அணிகலன்களும், அடிமுதல் நுனிவரையும் சிற்ப வேலைப்பாடுடைய அவர்களின் கோயில்களுமே தமிழ்நாட்டில் ஓவியக் கலையும் சிற்பக்கலையும் எவ்வளவு ஓங்கியிருந்தன என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். பெண்கள் முற்றத்தே இடும் அழகிய கோலங்கள் பழந் தமிழரின் ஓவியத் திறமையை நன்கு விளக்க வல்லன.

தமிழ்ச் சிற்பிகள் மரத்தில் வேலை செய்வது போல் கற்களில் வேலை செய்தார்கள் என்பது மதுரையிலுள்ள புதுமண்டபத்தையும், பெரிய கோவிலையும் நோக்கும்போது நன்கு தெளிவாகின்றது. மாவலிபுரத்தில் பெரிய குன்றுகளே தேர் யானை குதிரைகளாக மாற்றப்பட்டுள்ளன அவை இன்றைய மக்களுக்குப் பெருவியப்பளிப்பனவா யிருக்கின்றன.

ஓவியங்களையும் சிற்பங்களையும் பற்றிய விதிகளைக் கூறும் நூல்கள் பல விருந்தன. அவைகளிற் சிற்சில பகுதிகள் சிலப்பதிகாரத்துக்கு அடியார்க்கு நல்லார் செய்த உரையிற் காணப்படுகின்றன.

இற்றைக்கு ஆயிரத்து ஐஞ்ஞூறு ஆண்டுகளுக்கு முன் பல்வகை வண்ணங்களாற் றீட்டப்பட்ட அழகிய ஓவியங்கள் அசந்தாக்குகையிலும், இலங்கையிலுள்ள சிங்க மலையிலும் காணப்படுகின்றன. அவை, நிறம் சிறிதும் மங்காது புத்தப் புதியனபோல் தோன்றுகின்றன.

---

# 32. நெசவுத் தொழில்

தமிழ் நாட்டுக் கைத்தொழில்களுள் நெசவுத் தொழில் மிகப் பழங்காலத்திலேயே வளர்ச்சியுற்றிருந்தது. பழைய சிந்து வெளித் தமிழர் அழகிய ஆடைகளை நெய்ய அறிந்திருந்தனர். இந்தியாவினின்றும் மேற்குத் தேசங்களுக்கு ஆடைகள் அனுப்பப்பட்டன. ஆடை சிந்து நதி முகத்துவாரத்தினின்று சென்றமையின் அது மேற்குத்தேச மக்களால் சிந்து என வழங்கப்பட்டது. பிற்காலத்தில் கிரேக்க உரோம வணிகர் தமிழ் நாட்டினின்றும் அழகிய பஞ்சு ஆடைகளையும் பட்டாடைகளையும் வாங்கிச் சென்றனர். இந்தியப் பட்டாடைகள் உரோமரால் 'சிலந்தி வலை' என்று கூறப்பட்டுள்ளன.

பழைய தமிழ் நூல்கள், பால் நுரை, ஆவி அனைய மென்மையுடையன பட்டாடைகள் என்று கூறுகின்றன கம்பளியினாலும் அழகிய போர்வைகள் நெய்யப்பட்டன. ஆடையைக் குறிக்கத் தமிழில் ஐம்பதிற்கு மேற்பட்ட சொற்கள் காணப்படுகின்றன. அவைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொருவகை ஆடையைக் குறிக்கத் தொடக்கத்தில் வழங்கிய பெயர்களாக இருந்தனவாதல் வேண்டும்.

நெசவுத் தொழில் முற்காலத்தில் குடிசைத் தொழிலாகவும் இருந்ததெனத் தெரிகின்றது. பழைய நூல்கள் பெண்களே நூல் நூற்றூர்கள் என்றுகூறுகின்றன. ஆங்கிலர் ஆட்சிதொடங்குவதற்கு முன் இந்தியநாட்டிலிருந்தே ஆடைகள் மேற்குத் தேசங்களுக்கு அனுப்பப்பட்டன.

---

## 33. அணிகலன்கள்

பெண்கள் பெரும்பாலும் தம்மைப் பலவகையாக அலங்கரித்து அழகு செய்வதில் விருப்பமுடையோர். அழகு செய்யும் முறையிலிருந்தே அணி அணியும் பழக்கம் உண்டாயிற்று.

ஒரு காலத்தில் மக்கள் தாழ்ந்த நிலையில் இருந்தார்கள். அப்பொழுது அவர்கள் உலோகங்களைப் பற்றி அறிந்திருக்கவில்லை. அவர்கள் பூக்களையும், கொடிகளையும், இலைகளையும், இப்பிகளையும் நகைகளாக அணிந்து தம்மை அழகுபடுத்தினர்கள். சிலர் அவைகளைப்போல நிறக்குழம்புகளால் உடலில் எழுதிக்



5500 ஆண்டுகளின் முன் சிந்துவெளித் தமிழர் அணிந்த இருதய வடிவான கைவளை.



கொண்டார்கள். பின்பு பச்சை குத்திக்கொண்டனர். மக்களின் நாகரிகம் சிறிதுசிறிதாக வளர்ச்சியடைந்தது. அப்பொழுது அவர்கள் உலோகத்தைக் கண்டுபிடித்து அவைகளில் வேலைசெய்ய அறிந்தார்கள். அப்பொழுது அவர்கள் தாம் அணிந்த இலை, கொடி, பூக்களின் வடிவங்களை உலோகங்களிற் செய்து அணியலாயினர். இவ்வாறு நகை அணியும் வழக்கு உண்டாயிற்று.

பெண்கள் காதில் அணியும் நகை தோடு எனப்படும். தோடு என்பதன் பொருள் பூ. இன்றும் தோடு கற்கள் பதித்துப் பூவின் வடிவாகச் செய்யப்படுகின்றது. சில பெண்கள் காதைத் துளையிட்டுத் துளையில் நிறமூட்டிய ஓலைகளைச் செருகியிருந்தார்கள். அவை காதோலை எனப்பட்டன. ஓலைச் சுருள் வடிவாக உலோகத்தாற் செய்யப்பட்ட காதோலைகளைப் பழைய சிற்பங்களிற் காணலாம். ஆதியிற் பெண்கள் சங்கு வளைகளையே அணிந்தார்கள். பின்பு சங்கு வளைகளுக்குப் பதில் பொன் வளைகள் அணியப்பட்டன.

மக்கள் நாகரிகம் முதிர்ச்சியடைந்தபோது பொன் வெள்ளி முதலியவைகளில், மணிகளும்,

முத்துக்களும் அழுத்திப் பலவகையான அணி கலன்கள் செய்யப்பட்டன. அவ்வகை அணி கலன்களைப் பழைய சிற்பங்களிலும் பழந்தமிழ் நூல்களிலும் காணலாம்.

---

## 34. உடை

இடங்களுக்கு ஏற்ப மக்களின் உடை மாறு படுகின்றது. வெப்ப நாடுகளில் வாழ்வோர் குறைந்த உடைகளை அணிவர். குளிர் நாடுகளில் வாழ்வோர் உடம்பு முழுவதையும் போர்த்துக் கொள்வர். தமிழ் நாட்டில் வெப்பம் அதிகம். ஆதலின் மக்கள் உடையைக் குறைவாக அணிந் தார்கள். "உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்" என்னும் ஔவையார் கூற்றினால் தமிழர் நான்குமுழ அளவினதாகிய ஆடையை இடுப் பிற் கட்டியிருந்தார்கள் என அறியலாம். தமிழ்ப் பெருமக்கள் தலையில் பாகை கவித்தார்கள்; மார் பில் மேலாடை அணிந்தார்கள்; இடுப்பில் உடுத் திய ஆடைக்கு மேல் ஆடை அவிழாதபடி நீள மான துணியைச் சுற்றிக் கட்டியிருந்தார்கள்.



பழைய தமிழ் மக்களின் உடை எவ்வகையின தென்பதை நாம் பழைய சிற்பங்களிற் கண்டு கொள்ளலாம்.

தமிழர் சட்டை தரிக்கவில்லை. அரசர் அரண் மனைகளில் வேலை புரியும் பணியாளர் சட்டை அணிந்தனர். கொப்பூழுக்கு மேலும் ஒடுங்கிய ஆடை ஒன்று கட்டப்பட்டது. அது உதர பந்தன ஆடை எனப்பட்டது. அரசன் நீண்டு குவிந்த முடியை அணிந்தான்.

மேல் நாடுகளில் குளிர் அதிகம். அங்கு வாழ்ந்த மக்கள் தமது உடல் முழுவதையும் ஆடையினால் மூடிக்கொண்டனர். அம்மக்கள் வெப்ப நாடுகளுக்குச் சென்றபோதும் அவ்வகை உடைகளையே அணிந்தனர். அவர்கள் கிழக்கே நாடுகளைக் கைப்பற்றி அவைகளை ஆளத்தொடங் கினர். அப்பொழுது அரசினரின் கீழ் அலுவல் பார்ப்போர் மேல் நாட்டவரைப்போல உடுத்தல் வேண்டுமென்னும் சட்டம் இருந்தது. ஆகவே கிழக்கு நாடுகளிலும் குளிர் மிகுந்த மேற்குநாட்டு மக்களைப்போலச் சட்டைதரிக்கும் வழக்கம் உண் டாயிற்று. இவ்வழக்கம் நாளுக்குநாள் சிறிது சிறிதாகப் பரந்தது. இப்பொழுது கிழக்குத்தேச மக்கள் மேற்கு நாட்டவர்களைப்போல் உடுப்பதிற் பெருமைகொள்கின்றனர். வெவ்வேறு மக்கள்

கலப்பதினால் ஒருவர் பழக்க வழக்கங்கள் மற்றவர்களிடையே பரவுவது வழக்கம். நம்முடைய முன்னோர் குடுமி வைத்திருந்தார்கள். குடுமி மிகவும் பரிசுத்தமுடையதென்று கருதப்பட்டது இன்று நம்மவருள் பலருக்குக் குடுமி இல்லை. இரு வேறு மக்களின் நாகரிகம் கலப்பதால் இவ்வகை மாறுதல்கள் பல உண்டாவது இயல்பு.

---

## 35. உணவு

தமிழ் மக்கள் ஊன்வகைகளையும் காய்கறி வகைகளையும் நாவுக்கினிய நல்ல உணவுகளாகச் சமைத்து உண்டார்கள். அவர்கள் காய்கறிவகைகளையும் கூலவகைகளையும் தன்மையான உணவாகவும், ஊனைக்கறியாகவும் பயன்படுத்தினர். மேற்கு நாட்டுமக்களின் உணவுமுறை இதற்கு நேர் மாறானது.

தமிழரின் உணவு வகைகள் பலவகையின. தாளிதக்கறி, பொரிக்கறி, வறை, துவட்டல், துவை, புளிங்கறி, காடி, ஊறுகாய் முதலியன கறிவகைகளுட் சில. அடிசில், அமலை, அமுது, அயினி, அவி, அவிழ், அழுப்பு, உணா, ஊண், உண்கூழ், சதி, சாதம், சொன்றி, சோறு,



துப்பு, தோரி, பருக்கை, பாத்து, பிசி, புகர், புழுக்கு, புற்கை, பொம்மல், பொருகு, மடை, மிசை, மிதவை, மூரல், வல்சி என்பன சோற்றின் பெயர்கள். ஒவ்வொரு பெயரும் வெவ்வேறு வகையாகச் சமைக்கப்பட்ட சோற்றை உணர்த்தும். பருப்போடு சேர்த்துச் சமைக்கப்பட்ட சோறு பொங்கல் எனப்பட்டது. களி, கூழ், துழவை, கஞ்சி, நீராரம், தோசை, அடை முதலியன வெவ்வேறு வகையாகச் சமைக்கப்பட்ட உணவுகளாகும். அப்பம், பிட்டு, அஃகுல்வி, இலையடை, நொலை, மெல்வடை, பொல்லல், இடி, சஃகுல்லி, நுவணை, துவை, சீடை, வடை முதலியன பணியாரங்களுட் சில.

தமிழ் மக்கள் சுவைகளின் நுட்பங்களை அறிந்து நுகர்தற்கினிய உணவுகளைச் செய்து உண்டனர். உடல் நலத்தைப் பேணும் பொருட்டுச் சரக்கு வகைகளை உணவுடன் கலந்தனர். ஏற்ற உணவுகளை உண்பதால் நோயின்றி வாழலாமென நம்பப்பட்டது. நாம் கறிகளுடன் சேர்த்துச் சமைக்கும் சரக்குகள் பெரும்பாலும் மருந்தாகப் பயன்படுவனவாகும். இவ்வளவு நுட்பமாக வேறெந்த மக்களும் சமையல் செய்யும் முறையை அறிந்திருந்தார்கள் எனக் கூற முடியாது.

---

*Publication No. 398*

# OUR COUNTRY

BY

N. S. KANDIAH PILLAI




THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
TIRUNELVELI & MADRAS.

Price As. 12